ஓம் குமர குருதாச குருப்யோ நம:

# ஸ்ரீமுருகப் பெருமானின் மஹா கந்த சஷ்டி விரதம்




## மாலை அணிந்து மும்முடி சுமந்து புனித யாத்திரை

## விரத முறை, வழிபாடு பயன்கள் குறித்த விளக்கவுரை

ஓம் குமர குருதாச குருப்யோ நம:

# "ஸ்ரீ முருகப் பெருமானின் மஹா கந்த சஷ்டி விரதம்"

## மாலை அணிந்து
## மும்முடி சுமந்து
## புனித யாத்திரை

### விரத முறை
### வழிபாடு
### யாத்திரை பயன்கள்
### விளக்கவுரை

குமாரபகவான் தேவர்களை தேவலோகத்தில் குடியேற்றினார்.


| | |
|---|---|
| முதற்பதிப்பு | : நவம்பர், 2006 |
| பிரதிகள் | : 2000 |
| இரண்டாம் பதிப்பு | : அக்டோபர், 2010 |
| மூன்றாம் பதிப்பு | : அக்டோபர், 2011 |
| பிரதிகள் | : 2000 |
| புத்தகம் கிடைக்கும் இடம் | : **தவத்திரு சஞ்சீவி ராஜா சுவாமிகள்**<br>எண்.10/27, குப்பு தெரு,<br>காஞ்சிபுரம் |


அன்புடன்

பழனிவேலு, மல்லிகா குடும்பத்தினர்

சனிக்கிழமை தோறும் காலை 8.00 மணிக்கு **"ஆத்மசங்கமம்"** ராஜ் தொலைக்காட்சியில் பார்த்து பயன் பெறுங்கள்.

வெள்ளிக்கிழமை காலை 9.30 மணிக்கு **"நம்ம நேரம்"** ஞாயிற்றுக்கிழமை காலை 7.00 மணிக்கு **"உபதேசம்"** ஜெயா ப்ளஸ் தொலைக்காட்சியில் பார்த்து பயன் பெறுங்கள்

ஓம் குமரகுருதாச குருப்யோ நம:

# பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகளின் வாழ்வும் வாக்கும்

## பிறப்பு :

திருவிராமேச்சுரம் எனும் திருத்தேவையில் சிவநேயச் செல்வரான சாத்தப்ப பிள்ளை அவர்களுக்கும் செங்கலமத்தம்மை அவர்களுக்கும் கி.பி. 1850-52 வருடம் தலைப் புதல்வனாகச் சுவாமிகள் ஒரு வெள்ளிக் கிழமை அன்று சூரியோதயத்தில் அவதரித்தார். பெற்றோர்கள் அப்பாவு எனப் பெயரிட்டனர். சேஷகிரிராயர் என்பவர் இவருடைய முருகபக்தியைக் கண்டு குமரகுருதாசர் எனும் பெயர் சூட்டினார். இப்பெயரே நிலைத்து நிற்பதாயிற்று. இவருடைய சொந்த ஊர் பாம்பன் என்பதால் இவரை மக்கள் பாம்பன் சுவாமிகள் என அழைக்கலாயினர்.

## கல்வி:

பாம்பனைச் சேர்ந்த தமிழாசிரியர் முனியாண்டி பிள்ளை அவர்களிடம் தமிழ் கற்றார். கிருத்தவப் பள்ளியில் முதல் வகுப்பில் சேர்ந்து கல்வி பயின்றார். முதல் வகுப்பை முடிக்கும் முன்பே பள்ளியை விட்டு விலகினார். நாகநாத சுவாமிகளின் திருக்கோவில் பிரும்மோற்சவத்திற்குச் சென்றார். ஒரு இளந்துறவி சிவசிவ எனச் செபித்துக் கொண்டிருந்தார். இவரும் அவ்வாறே செபித்தார். பாம்பனுக்கு மீண்ட பின்பும் செபித்த வண்ணமிருந்தார். திடீரென முருகன் நூல் ஒன்று பார்க்கும் எண்ணம் தோன்றியது. ஒரு கடையில் சென்று முருகன் நூல் கேட்டார். கடைக்காரர் கந்தசஷ்டி கவசம் ஒன்றை முக்காலணா கொடுத்து வாங்கி அதை நாள்தோறும் முப்பத்தாறு முறை பாராயணம் செய்து வந்தார்.

## முதல் பாடல் பாடியது:

தமக்குச் சொந்தமான தென்னந் தோப்பைப் பார்வையிடச் சென்றார். இவர் தந்தையார் இவருக்கு முன்னே தோப்புக்குள்ளே சென்றுள்ளதை அறிந்து இவர் வாயிலில் நின்று விட்டார். கையிலிருந்த கந்த சஷ்டி கவசத்தைப் பிரித்துப் பார்த்தார். தேவராய சுவாமிகள் பாடியருளியது என்று இருந்தது. தானும் அவரைப் போலவே பாட

வேண்டும் என முருகனை வேண்டினார். அன்று வெள்ளிக்கிழமை. சூரியோதயம் ஆகும் நேரம். ஏடு வகிர்ந்து எழுத்தாணி கொண்டு எழுதத் தொடங்க நினைத்து, "முருகப் பெருமானே உன்னையே பாடக் கடவேன்" பதிக முடிவில் அருணகிரிநாதர் பெயர் வைத்தே முடிக்கக் கடவேன் என்று கூறினார். அப்போது அவரை அறியாமலே "கங்கையைச் சடையில் பரித்து" எனும் மங்கலத் தொடர் தோன்றியது. அதை ஆரம்பமாக வைத்து பன்னிரு சீர் விருத்தம் பாடியருளினார். அன்று முதல் ஒவ்வொரு நாளும் ஒரு பாடல் பாட வேண்டும் என முடிவு செய்தார். அவ்வாறே பாடி நூறு பாடல்கள் எழுதி வைத்தார். சேது மாதவையர் என்னும் சிறந்த அடியார் அப்பாடல்களைப் பார்த்து மிகவும் நன்றாக உள்ளன என்றும், புதுக்கோட்டைப் புலவர் குமாரசாமி அவர்களும் பார்வையிட்டு நன்றாக உள்ளது, முதல் பாடலிலேயே துறவு தோன்றுகிறது என்றார். நூலை வெளியிடலாம் என்று சேதுமாதவையர் சுவாமிகளிடம் கூறினார்.

### கைரேகை பார்த்தல்:

இலங்கை சோதிடர் ஒருவர் சுவாமிகளின் கைரேகை பார்த்து அதிசயத்து ஏடெடுத்துப் பார்த்த பொழுது இவர் அனேக நூல் இயற்றுவார். தமிழால் வேற்பரமனைப் பாடுவார். சித்து விளையாடாத்துறவு, அனேக சீடர்கள் சேர்தல், இன்னும் ஒரு இரகசியக் குறிப்பு என அதில் இருந்ததைக் கண்டு அதிசயித்தார்.

### மந்திர உபதேசம்:

சேதுமாதவையர் இவரை இராமேச்சுரத்திற்கு விஜயதசமி முதல் நாள் வந்து தம் வீட்டில் தங்குமாறு கூறினார். இவரும் அவ்வாறே சென்று தங்கினார். விஜயதசமி வெள்ளிக்கிழமை அதிகாலை சூரியோதயத்தில் அக்கினி தீர்த்தத்தில் சுவாமிகளை மூழ்கச் செய்து, உடம்பில் திருநீறு பூசினார். பின்பு ஒரு தனியிடத்தில் சேதுமாதவையர் இவருக்குச் சடக்கர (சரவணபவ) மந்திரத்தை உபதேசம் செய்தார். இனி வேறு மந்திரம் சொல்லக்கூடாது. வடமொழியைக் கற்க வேண்டும் எனக் கட்டளையிட்டார். அவர் இட்ட கட்டளைப்படியே இவர் நடந்து வந்தார்.

**திருமணம்:**

பெற்றோரும் சேதுமாதவையரும் இவரைத் திருமணம் செய்து கொள்ளும்படி வற்புறுத்தினர். துறவு நாட்டம் கொண்டிருந்த இவர் வினைப் பயனால் காளிமுத்தம்மை என்னும் அம்மையாரை மணந்து கொண்டார். இவருக்கு ஒரு பெண்ணும், இரு ஆண்களும் மகவாகப் பிறந்தனர்.

**பழநிக்குச் செல்லும் ஆசையால் பொய் ஒன்று கூறல்:**

1891 ஆம் ஆண்டு தமது நண்பர் அங்கமுத்துப் பிள்ளை அவர்களிடம் நாளை பழநிக்குச் செல்கிறேன் என்றார். முருகன் உத்தரவு கிடைத்துவிட்டதா? என நண்பர் கேட்டார். ஆம் என்று ஒரு பொய் சொன்னார். அன்று மாலை முருகப் பெருமான் முன்னே தோன்றி "உன்னை நான் பழநிக்கு வரும்படி கட்டளை இட்டேனா? ஏன் பொய் சொன்னாய்?" என்று பல்லை நறநறவென்று கடித்து கோபித்துக் கூறினார். நிலம் பொலம் கருதிப் பொய் கூறவில்லையே ஆன்ம லாபம் கருதித்தானே கூறினேன்" என்று இவர் கூறினார். அது தருவதற்கு எனக்குத் தெரியாதோ? நான் வருக என்று கட்டளையிடும் வரை வரமாட்டேன் என்று கூறுக என்றார் இவரும் அப்படியே செய்கிறேன் என்று தரையில் விழுந்து வணங்கினார்.

**குமர கோட்ட தரிசனம்:**

காஞ்சியில் தங்கி எல்லாக் கோவில்களையும் தரிசித்துவிட்டுக் கையில் பணம் குறைவாக இருந்ததால் ஊருக்குப் புறப்படத் தான் தங்கியிருந்த ஆடிசன்பேட்டைச் சத்திரத்தின் (ஒவுஸிக்கடை சத்திரம்) முற்றத்திற்கு வந்தார். அப்போது வெள்ளை முண்டாசு கட்டி, வெள்ளை உடை உடுத்திய, 32 வயது மதிக்கத் தக்க ஒருவர் நேரில் வந்து எந்த ஊர்? யாது காரியமாக வந்தீர்? குமர கோட்ட தரிசனம் ஆயிற்றா எனக் கேட்டார். இவர் இல்லை என்றார். அவர் இவரை அழைத்துச் சென்று குமர கோட்டத்தின் கொடிமரத்தைக் காட்டி இதுவே குமர கோட்டம் என்று சொல்லி மறைந்துவிட்டார். இறைவனின் அருளை நினைத்து கண்ணீர் மல்கி கைகூப்பி தொழுது குமர கோட்ட தரிசனம் செய்து புறப்பட்டார்.

**பிரப்பன் வலசையில் தவம்:**

1894 ஆம் ஆண்டு பிரப்பன் வலசை (இராமநாதபுரத்திற்கும் இராமேச்சுரத்திற்கும் இடையில் உள்ள சிறிய கிராமம்) மயானத்தில் சதுரக்குழி அமைத்து முருகப் பெருமாளை நினைத்து நிட்டை கூடினார். ஆறாவது நாள் மனம் அடங்கி முருகனை தியானித்தார். ஏழாம் நாள் இருமுனிவர்கள் (அகத்திய முனிவரும் அருணகரி நாதரும்) புடைசூழ (பழனி ஆண்டவர்) பிரப்பன் வலசைக்கு வந்தார். வந்து ஒரு இளைஞர் உபதேசம் செய்தார். செய்த பின்பு மூவரும் மேற்றிசை நோக்கி நடந்து சென்று மறைந்தருளினர். இதன் பின் தொடர்ந்து இவர் நிட்டையிலிருந்தார். மொத்தம் 35 நாட்கள் நிட்டையிலிருந்தார். 35ஆம் நாள் ஆகாயவெளியில் பேரொலி உண்டாயிற்று. அப்பொழுது விண்ணும், மண்ணும் நடுக்கம் கொள்வது போல் சுவாமிகளுக்கு புலப்படுவதாயிற்று. "ஏகாதேசருத்திரர் வருகின்றனர், நீ எழுந்துவிட வேண்டும்" என்னும் சத்தம் தோன்றிற்று. இவர், "எவர் கூறினும் எழேன், செவ்வேள் பரமன் கட்டளை கிடைத்தால் மட்டுமே எழுவேன்" என்று தெரிவித்தார். "அவ்வேள் கட்டளை அப்படியே செய்க" என இவருக்குப் பதில் கி டைத்தது. உடனே உச்சி மேல் கைகூப்பி எழுந்து அவ்விடத்தை மும்மு ற வலம் வந்து தண்டாகாரமாக வணங்கி எழுந்து "இவ்விடத்தை விட்டு செல்ல எனக்கு மனம் இல்லையாயினும் இறைவன் கட்டளைப்படி விட்டுச் செல்கிறேன்" என்று கூறி ஊருக்குள் சென்றார். நிலவு மேற்றிசையில் விளக்கமாயிருந்தது. இன்று சித்ரா பவுர்ணமி என்றும் நினைத்து சென்ற இரவோடு நாள் முப்பத்தைந்து. இரவு வெள்ளிக்கிழமையைச் சேர்ந்ததே என்று கூறினார். (இன்றும் பிரப்பன் வலசையில் சித்ரா பவுர்ணமி விழா வெகு சிறப்பாக கொண்டாடப்படுகிறது.

**துறவு பூணல்:**

1895 ஆம் ஆண்டு துறவு பூண்டு மதுரைக்கு வந்து சென்னைக்குப் புறப்பட ரயிலில் ஏறினார். சென்னை ரயில் நிலையத்தில் வந்திறங்கினார். ஒருவர் வந்து இவரை வரவேற்று வைத்தியநாத முதலித் தெரு, எண்:41 இல்லத்தின் முன்னே இவரை விட்டுச்சென்றார். அந்த வீட்டுக்குடைய பங்காரு அம்மாள் என்பவர் சுவாமியை வணங்கித் தம் மகனையும் மருமகளையும் அழைத்து இரவு கனவில் அன்னம் கேட்ட சுவாமி

வந்துள்ளார் பாருங்கள் என்று சொல்லி மகிழ்ந்து இவரை அன்புடன் அழைத்துச் சென்று தம் வீட்டில் தங்கவைத்தார். இவர் தான் சென்னையில் சுவாமிகளின் முதல் சீடர். பிற்காலத்தில் சுவாமிகளிடம் தீக்கை பெற்றுத் துறவு பூண்டார். குமாரானந்தம் என்றும் தீக்கை நாமம் பெற்றார்.

**பலநூல்கள் இயற்றல்:**

சென்னையில் இருக்கும் போதும், தல யாத்திரை செய்து சிதம்பரம் போன்ற தலங்களில் தங்கும் போதும் சுவாமிகள் சாத்திர தோத்திரங்களாகப் பல நூல்களை இயற்றியருளினார். இல்லத்திலிருக்கும் போதும் துறவு பூண்ட பின்பும் பாடியருளிய பாடல்களின் தொகை 6666. இவற்றை ஆறு மண்டலமாக வகுத்தார். எல்லாப் பாடல்களும் முருகனைப் பற்றியவையே. சந்தங்கள் பாடுவதிலும் சித்ர விசித்திர கவிகள் பாடுவதிலும் இணையற்ற புலமை உடையவர். ஒரு மணி நேரத்தில் 64 சீர் கொண்ட ஒரு பாடலை 125 வேறு வேறு பாடல்களாக மாற்றிப் பாடி உள்ளார். அதற்குப் பஞ்ச விம்சதி அதிகசதபங்கி என்று பெயரிட்டார். இது போன்ற பாடலை இதுவரை எவரும் பாடியதில்லை. வியத்தகு புலமை உடையவர் சுவாமிகள்.

**சீவகாருண்ணியம்:**

உயிர்கள் மீது கருணை காட்ட வேண்டும். அதுவே பக்திக்கு அடிப்படை. கருணை இல்லாதவனுக்கு இறைவன் அருள் கிடைக்காது என்பது அவர் போதனை. தலயாத்திரையில் திருநெல்வேலி மாவட்டத்தில் நயினார்ப்பிள்ளை என்ற அடியார் வீட்டில் சுவாமிகள் தங்கியிருந்தார். பகல் நேரத்தில் ஒரு மூட்டுப்பூச்சி ஓடுவதைப் பார்த்தார். அந்த வீட்டு பையனை அழைத்து அந்த மூட்டைப் பூச்சியைப் பிடித்து வெளியில் விடச் சொன்னார். அவன் மூட்டைப் பூச்சிதானே என்று நினைத்து நசிக்கிக் கொன்றுவிட்டான். "மடவோன் ஓர் சிற்றுயிரைக் கொன்றுவிட்டானே" என்று மனம் வருந்தி இன்று இந்த வீட்டில் இழவு நிகழ்ந்து விட்டது. யான் ஏதும் உண்ண மாட்டேன் என்று கூறிவிட்டு அன்று முழுவதும் உபவாசம் இருந்தார். மறுநாள் நீராடிப் பூசை

செய்யும் போது அச்சிற்றுயிர்க்கு நல்லகதி கிடைக்க முருகனை வேண்டினார். இத்தகைய சீவகாருண்ணியம் உண்டேல் பக்தி உண்டாகும். பக்தி உண்டேல் பாச வைராக்கியம் உண்டாகும். பாச வைராக்கியம் உண்டேல் ஞானம் உண்டாகும். ஞானத்தினால் முக்தி வாய்க்கும் எனச் சுவாமிகள் போதித்துள்ளது நினைவு கூரத்தக்க உபதேசம்.

**உணவு நியமம்:**

சுவாமிகள் ஒரு வேளை உணவு கொள்ளும் நியமத்தை மேற்கொண்டார். உச்சிப் பொழுது தான் உண்பார். உச்சிப் பொழுதை விட்டு மேற்கே சிறிது சூரியன் சாய்ந்தாலும் உணவு கொள்ள மாட்டார். உப்பு, புளி, காரம் நீக்கிய உணவை உண்பார். கூட்டு, பொறியல் என்ற காய்கறி ஏதும் உண்ணமாட்டார். தம் இறுதிக்காலம் வரை இந்நெறியைக் கடைப்பிடித்தார்.

**மயூரக் காட்சி:**

1923ஆம் ஆண்டு டிசம்பர் 27ம் நாள் ஞாயிற்றுக்கிழமை இவர் தம்பு செட்டித் தெரு வழியே தெற்கிலிருந்து வடக்கு நோக்கி நடந்தார். அப்போது வடக்கிலிருந்து தெற்கு நோக்கி ஓடி வந்த பெரிய குதிரை வண்டி இவர் மீது மோதி விட்டது. சுவாமிகள் நிலமிசை வீழ்ந்தார். வ்ண்டிச்சக்கரம் இடக்கணைக்காலில் ஏறி முறிந்துவிட்டது. அங்குக் கூடியவர்கள் உடனே அந்த வண்டியிலேயே இவரை அமர்த்தி மருத்துவமனையில் மன்றோவார்டில் 11ஆம் எண் அறையில் சேர்த்தனர். மருத்துவர்கள் எக்ஸ்ரே எடுத்துப் பார்த்தனர். உப்பு நீக்கி உண்பதாலும் முதிர்ந்த வயதாலும் முறிந்த எலும்பு பொருந்தாது. இருப்பினும் மருத்துவமனையில் இருங்கள் என்று தங்க வைத்தனர். சுவாமிகள் இத்துடன் உலக வாழ்வு முடிந்துவிடும். முருகன் திருவடியை அடைந்து விடுவோம் என்று மகிழ்ந்தார்.

சுவாமிகள் கால் முறிந்து அரசுப் பொது மருத்துவமனையில் இருக்கும் செய்தி சென்னை எங்கும் பரவி விட்டது. தலைமைச் சீபர்

சுப்பிரமணியதாசரும் அவர் துணைவியார் பாப்பாத்தி அம்மாளும் ஓடோடி வந்த எங்களுக்கு ஓங்காரத்தை உபதேசித்த எங்கள் பேறே! இனி நாங்கள் என் செய்வோம் என்று அழுது புலம்பினர். அவர்களை அடுத்துச் சிவசங்கரத் தம்பிரான், ஞானசேகர முதலியார் வந்து கண்ணீர் பொழிந்து அறற்றினர். அன்று முழுவதும், இரவுப் பொழுது கழிந்த மறுநாளும் அன்பர்கள் வந்த வண்ணம் இருந்தனர். நாள்தோறும் சுவாமிகளுக்கும் அன்னமும், மென்சுவைக் கனியும், பசுவின் பாலும், சுப்பிரமணியதாசரும் பாப்பாத்தி அம்மாளும் கொண்டு வந்து கொடுத்து வந்தார்கள். சுப்பிரமணிய தாசரும், சிவசங்கரத் தம்பிரானும், ஞானசேகர முதலியாரும் தம் வீட்டில் இருந்த வண்ணம் சுவாமிகளின் கால்முறிவு குணமாக வேண்டும் என்று சண்முக கவசம் பாராயணம் செய்து வந்தார்கள். சுப்பிரமணியதாசர் ஓதுகின்ற பொழுது முறிந்தகாலை இரண்டு வேல் அலகுகள் இணைத்து ஒரு வேல் அலகு அவற்றைத் தாங்கியிருப்பது போன்ற காட்சி கிடைத்தது.

சுவாமிகள் மருத்துவமனையில் சேர்க்கப்பட்ட நாளிலிருந்து 11வது நாள் இரவு ஒரு சிறுமயிலும் ஒரு பெரிய மயிலும் என இரண்டு மயில்கள் மருத்துவமனையின் மேற்கே வானத்தில் தோகையை விரித்து நடனம் ஆடி வந்தன. இந்த மாபெரும் காட்சியை அவர் கண்டார். அதன்பின் சிவந்த நிறமுடைய குழந்தை ஒன்று சுவாமிகள் படுக்கையில் கால் நீட்டிப் படுத்து மறைந்தது. இதன் பிறகு மருத்துவர் எக்ஸ்ரே எடுத்துப் பார்த்தனர். முறிந்த கால் பொருந்தியிருந்தது. மருத்துவரால் கை விடப்பட்டதை மருகன் சூக்குமப் பிரணவம் தூலப் பிரணவ மயில்கள் இரண்டனை அனுப்புவித்தும், தானே குழந்தையாக வந்து படுத்தும் நான் உன்னை விட்டு நீங்கவில்லை என்று உணர்த்தி முறிந்த காலைப் பொருந்தச் செய்தருளினான். மருத்துவர் இதுவரை கண்டிராத அற்புதம் என்று கூறிச் சுவாமிகளை வணங்கினர். மேலும் 15 நாட்கள் மருத்துவமனையில் இருந்தால் பூரண குணமடைவாய் என்று கந்தனிடமிருந்து அசரீரி தோன்றியது. அதன்படியே 15 நாள் மருத்துவமனையில் தங்கிப் பின்பு புதுப்பாக்கம் குழந்தைவேல் முதலியார்

இல்லம் சென்று தங்கினார். பின்பு நம்புலையர் தெருவில் ஜெகந்நாத முதலியார் வீட்டின் மேல் மாடியில் நடைப் பயிற்சியை மேற்கொண்டார்.

**விதேக முத்தி விழைதல்:**

சுவாமிகள் விதேகமுத்தி அடைய விழைந்து தாம் தங்கியிருந்து வீட்டைவிட்டு ஒருவருக்கும் சொல்லாமல் புறப்பட்டு விட்டார். திருவொற்றியூர், பழவேற்காடு, திருப்பாலைவனம், ஆண்டார் குப்பம், பொன்னேரி முதலிய திருத் தலங்களைத் தரிசித்தார். ஓர் அன்பர் சுவாமிகளை அடையாளம் கண்டு எப்படியும் சென்னைக்கு அழைத்துவர வேண்டும் என்று தீர்மானித்துச் சுவாமி திருவொற்றியூர் மகிழடி சேவை விழாவில் கலந்து கொள்ளச் செல்வோம் என்று கூறினார். அதற்கு அவர் இசையவே இரயில் ஏறி இருவரும் திருவொற்றியூர் வந்தனர். சுவாமிகளை அங்கு விட்டுவிட்டு அன்பர் சென்னைக்குச் சென்று சுவாமிகள் திருவொற்றியூரில் இருப்பதை கூற அவர்கள் திரளாக வந்து அழைத்தார்கள். அதற்குச் சுவாமிகள் மகிழடி சேவை விழா முடியும் நாள் வரை இங்கு இருப்பேன். முடிந்த பின் வருவேன், வந்தாலும் தனித்தே இருக்க விரும்புகிறேன் என்று கூறிவிட்டார். அவர் சொன்னது போலவே மகிழடி சேவை முடிந்த பின்பு வைத்தியநாத முதலி தெருவில் ஒரு வீட்டின் மேல் மாடியில் தனியாகத் தங்கி நிட்டை கூடினார். மௌனமாக இருந்து வந்தார்.

**மகாசமாதி அடைதல்:**

சுவாமிகள் மகாசமாதி அடைவற்குப் பதினைந்து நாட்கள் முன்னே தலைமைச் சீடர் சுப்ரமணியதாசரிடம் திருநீறளித்துத் திருவான்மியூரில் நிலம் பார் என்றார். அவரும் நிலம் பார்த்தார். சுவாமிகள் ரூ. 450/- கொடுத்து வாங்கிப் பதிவு செய்தார். கி.பி. 1929ஆம் ஆண்டு மே மாதம் 30 ஆம் தேதி வியாழக்கிழமை காலை 7.15 மணிக்கு அடியார்கள் யாவரும் காண சுவாசத்தை உள்ளுக்குள் இழுத்து உந்தியில் அடக்கினார். உந்தி எழுந்து அடங்கியது. இது தான் சுவாமிகள் மகாசமாதி அடைந்த நிலை. இது நிகழ்ந்தது சுக்கில வருடம் வைகாசி மாதம் அமரபக்கத்துச் சட்டி திதியும் அவிட்ட நட்சத்திரமும் கூடிய சுப வேளை

என்க. திருவான்மியூரில் மே மாதம் 31ஆம் நாள் வெள்ளிக்கிழமை காலை 8.15 மணிக்கு சமாதியில் எழுந்தருளி அடியார்க்கு அருள் மாரி பொழிந்து வருகிறார்.

**மயூரவாகன சேவன விழா:**

சுவாமிகளுக்குக் கிடைத்த மயூரக் காட்சியை மயூர வாகன சேவன விழா என நடத்தி வந்தார். தனது வில்சாஸனத்தில் இந்த விழாவைச் சூரியர் சந்திரர் உள்ளவரை சிறப்பாக மஹாதேஜோ மண்டலத்தார் செய்துவர வேண்டும் என எழுதி வைத்துள்ளார்.

**வில்சாஸனத்தில்:**

மஹாதேஜோ மண்டல சபை என 21 பேர் கொண்ட ஓர் சபையை நிறுவினார். மயூரவாகன சேவன விழாவைச் சிறப்பாக செய்துவர வேண்டும் என எழுதியுள்ளார். தமது சீர்களும், தமது போதனைகளை ஏற்பவரும், சுப்பிரமணியக் கடவுளை வழிபடுவோரும், சமஸ்கிருத மொழியில் துவேஷம் கொள்ளாதவரும் இச்சபையில் உறுப்பினர்களாக இருக்கத் தகுதி உடையவர் ஆவர் எனக்கூறியுள்ளார்.

**சுவாமிகள் நெறி:**

பரம்பொருள் முருகப் பெருமான் ஒருவனே எல்லாத் தெய்வங்களுக்கும் மேலானவன். பிறவாதவன், இறவாதவன், முத்தியை அளிக்க வல்லவன். அவன் உருவம் அற்ற நிலையில் சிதாகாசமாய் எங்கும் நிறைந்துள்ளவனாய் உள்ளான். முத்தி விரும்புவோர் அவன் ஒருவனையே தொழ வேண்டும்.

**ஏகதெய்வ வழிபாடு:**

முத்தி அளிக்கவல்ல கடவுளான முருகன் ஒருவனை மட்டுமே வழிபட வேண்டும். பல தெய்வ வழிபாடு பந்தத்தை விளைவிக்கும். ஒரு தெய்வ வழிபாடு முத்தியை அளிக்கும். தியான பாவனையில் ஒரு தெய்வத்தையே தியானிக்க முடியும். பல தெய்வத்தை தியானிக்க முடியாது என்று உணர வேண்டும். ஏதேனும் ஒரு நன்மையைக் கருதி தாம் வழிபடும் தெய்வத்தை விட்டு வேறு வேறு தெய்வத்தை வழிபட்டால்

தம் வழிபாடு மீது கொண்டுள்ள நம்பிக்கை குறையும். ஏக பத்தினி விரதமுடையார் போல் ஒரு தெய்வ வழிபாட்டில் உறுதியாக இருத்தல் அவசியமாகும்.

**அகப்பூசை:**

வேலிறைவன் உருவத்திற்கு அபிஷேக ஆராதனை செய்து வழிபடுவது அவசியம். தூலமனம் தூலத்தைப் பற்றும். அது பக்தி தீவிரமடையத் தீவிரமடைய அருவ மனமாகும். அவ்வாறு ஆகும் போது முருகனின் அருவத்தைத் தியானிக்க வேண்டும். சிதாகாசப் பெருவெளியே அருவநிலை. இவ்வாறு தியானிப்பதே அகப்பூசை. இதனைச் செய்யாது வெளிப்பூசை எனும் புறப்பூசையையே செய்து வந்தால் பற்றை உண்டாக்கும். முத்தி கிடைக்காது.

**துறவு:**

முருகனை வழிபடுவோர் இல்லறத்திலும் இருக்கலாம். துறவறத்திலும் இருக்கலாம். இல்லறத்தில் பெறும் ஞானம் இரும்பில் பதித்த மணி போன்றதாகும். துறவறத்தில் பெறும் ஞானம் பொன்னில் பதித்த மணி போன்றதாகும்.

**அடியார் நெறி:**

திருநீறு, உருத்திராக்கம் அணியவேண்டும். புலால் உண்ணக் கூடாது. கொலை, களவு, கள், காமம், பொய் ஆகிய ஐம்பெரும் குற்றங்களைச் செய்யக்கூடாது. என்றும் உண்மை பேச வேண்டும். உயிர்களிடத்தில் அன்பு வேண்டும். பிறர் பொருள் மீது ஆசை கூடாது. தம் மதத்தையும் தாம் வழிபடும் கடவுளையும் பற்றிப் பெருமையாகப் பேசலாம். பிறர் கடவுளை இழிவாகப் பேசக்கூடாது. மரியாதை நிமித்தம் வணங்க வேண்டும். பிற மதங்களை இழித்துக்கூறினால் அறியாமை வளரும். கடவுள் வழிபாடுடையோர் உணர வேண்டியது எல்லா மதங்களின் அருவம் கடந்த நிலை சிதாகாசம் என்ற பரம்பொருள் நிலைதான். அந்நிலையில் கடவுள் நிலையில் வேறுபாடு கிடையாது. எல்லோரிடமும் அன்பும் சகோதரத்துவமும் கொள்ள வேண்டும்.

## ஸ்ரீ முருகப்பெருமானின் மஹாகந்த சஷ்டி விரதம்

அசுரனாகிய சூரபன்பன் தேவர்களுக்கு சொல்லொணாத கொடுமை இழைத்து தேவலோகத்தை அழித்து தேவர்களை வீரமகேந்திரபுரத்தில் சிறை வைத்து அடிமைத் தொழில் செய்யுமாறு கட்டளையிட்டு வருத்தினான். இந்திரன் முதலான தேவர்கள் முருகப்பெருமானை துதித்து தங்களை சூரபன்பனிடமிருந்து காத்தருள வேண்டினார்கள். அவ்வேண்டுகோளை ஏற்ற குமாரபகவான் தம்முடைய கணங்களாகிய சேனைகளை நடத்தி இம் மண்ணுலகிற்கு வந்து திருச்செந்தூரில் பாடிவீடு அமைத்து சூரனோடு போரிட்டு அவனை இரு கூறு ஆக்கினார்கள். இருகூறும் வேலும் மயிலுமாக உருக்கொண்டு பெருமானுக்கு வாகனமும் கொடியும் ஆகின. இதன்பின்னர் குமாரபகவான் தேவர்களை தேவலோகத்தில் குடியேற்றினார். தேவேந்திரனுக்கு மீண்டும் தேவலோகத்தை ஆளுகின்ற நிலையை அளித்தருளினார். இதன் காரணமாக தேவர்கள் கந்தவேளுக்கு நன்றி செலுத்தும் பொருட்டு ஐப்பசி மாதம் பிரதமை தொடங்கி 6 நாட்கள் விரதம் இருந்து அப்பெருமானுக்கு வழிபாடு இயற்றினர். கந்தவேள் சூரபன்மனுடன் போரிட்ட நாட்கள் 6 என்பதால் தேவர்கள் 6 நாட்கள் விரதமாக கடைப்பிடித்தார்கள். இந்த விரதத்தையே ஆண்டு தோறும் "மஹா கந்த சஷ்டி" விரதமாக கடைபிடித்து முருகப்பெருமானின் அருளுக்கு அடியார்கள் பாத்திரராகி வருகின்றார்கள். பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் மிக சிறப்பாக கலசத்தில் முருகப் பெருமானை எழுந்தருளச் செய்து சஷ்டியை கொண்டாடி வந்தார்கள். இவ்வாறு கொண்டாடிய போது சஷ்டி கலசம் அசைந்ததை பார்த்து விரதத்தில் கலந்து கொண்ட அடியார்கள் அதிசயித்தனர்.

ஓம் குமர குருதாச குருப்யோ நம:

## குருவாக நின்று வழிநடத்துவோர் கடைப்பிடிக்க வேண்டிய வழி முறைகள்

ஸ்ரீ முருகப் பெருமானின் மஹா கந்த சஷ்டி விரதமிருந்து மாலை அணிந்து மும்முடி சுமந்து புனித யாத்திரையை தொடர்ந்து மூன்று ஆண்டுகள் நிறைவு செய்தவர்கள் குருவாக இருந்து, புதிய அடியார்களுக்கு மாலை அணிவித்து வழிநடத்தலாம். குருவாக நிற்பவர் முதலில் இந்த யாத்திரையைப் பற்றி தெளிவாக உணர்ந்து, புரிந்துகொண்டு அதன்படி மற்றவர்களுக்கு வழிகாட்ட வேண்டும்.

விரத நாட்கள் ஒரு மண்டலம் என்று அழைக்கப்படுகின்ற நாற்பத்தி எட்டு தினங்கள் ஆகும். இம் மண்ணுலகத்தை ஆள்வது இருபத்தேழு நட்சத்திரங்கள், பன்னிரெண்டு ராசிகள் மற்றும் ஒன்பது நவக்கிரகங்களே ஆகும். மேற்கண்டவற்றின் கூட்டுத்தொகை நாற்பத்து எட்டு. இதன் காரணமாகத்தான் விரத நாட்கள் 48 என உள்ளது. இந்த உலகத்தில் ஒரு மனிதனின் வாழ்க்கையில் உயர்வும், தாழ்வும், இன்பமும், துன்பமும் மேற்கண்ட கிரஹங்களின் மூலமாகவே ஏற்படுகிறது. ஒருவர் பிறக்கின்றபோது அவரது ஜனனநேரத்தில் அமைகின்ற லக்னம், நட்சத்திரம், கிரகங்கள் அமைந்துள்ள நிலை, (ஆட்சி, உச்சம், நீசம் போன்றவை) இராகுவின் அமைப்பு இவைகளின் கூட்டு சக்திக்கு ஏற்றபடி அவரவர் வாழ்க்கையும் அமையும் என்பது உறுதி. ஒருவர் யோகம் அடைவது அல்லது சோகம் அடைவது மேற்கண்ட அமைப்பைப் பொறுத்தே உண்டாகிறது. சோக நிலையிலுள்ள வாழ்க்கை மாறி, யோக நிலையான வாழ்க்கை அமைய இந்த **மஹா கந்த சஷ்டி விரதமும், பாராயணமும், யாத்திரையும்** மிகவும் பயனுள்ளதாக அமையும் என்பதில் சிறிதும் ஐயம் இல்லை. அவன் தாள் பட்டு அழிந்ததே அயன் கையெழுத்தே என்ற அருணகிரிநாதர் வாக்கின்படி அவன் விதியை மாற்ற கூடியது. இந்த மஹா கந்த சஷ்டி விரதம்.

ஒரு மண்டலம் (48 நாட்கள்) விரதம் இருக்க இயலாதவர்கள் 21 நாட்கள் விரதம் இருக்கலாம். இதற்கும் சில முக்கியமான காரணங்கள்

இருப்பதை நாம் மறக்கக்கூடாது. எண் 21-ல் உள்ள 2 என்ற எண் சந்திரனையும், 1 என்ற எண் சூரியனையும் குறிக்கின்றது. சூரியன், சந்திரன் ஆகிய இரண்டும் இந்த பூமண்டலத்திற்கு (பூமி) எவ்வளவு முக்கியமோ அதுபோலவே இவ்விரத நாட்கள் 21ல் உள்ள 2-1-ஐ கூட்டினால் கிடைக்கின்ற 3 என்ற எண் முருகப் பெருமானைச் சாரும் என்பதால் விரத நாட்கள் 21 என அமைக்கப்பட்டுள்ளது.

வயோதிகர்கள், உடல் நலம் குன்றியவர்கள் மட்டும், சஷ்டியின் மிக முக்கிய ஆறு தினங்கள் விரதமிருந்து புனித யாத்திரையில் கலந்து கொள்ளலாம். குருவாக நின்று அடியார்களுக்கு வழி காட்டுபவர் மேற்கண்டவற்றை உரிய முறையில் விளக்கி தெளிவு படுத்த வேண்டும்.

மனிதன் தன் செயலை நோக்கியே காரண காரியங்களுடன் நடந்து கொள்வான். இறைவனாகிய பரமன் (முருகன்) நம்முடைய நோக்கத்தையே காண்பான். ஆனால் ஒருவனுடைய செயலையும், நோக்கத்தையும் சீர் தூக்கிப் பார்த்து நற்பலனை அருள்பாலிப்பவர் நமது குருதாசரே ஆவார்.

அப்படிப்பட்ட நம்முடைய மஹா குருவான ஸ்ரீமத் பாம்பன் குமரகுருதாஸ சுவாமிகள், நாம் நலனும், பலனும் பெற வேண்டு மென்பதற்காக ஸ்ரீ முருகப் பெருமானின் புகழை 6666 துதிப்பாடல்களாக இயற்றி அருளியுள்ளார்கள். மேற்கண்ட பாடல்களைப் பாடி முருகப்பெருமானை தொழுது முறையிட்டால் நம்முடைய துன்பங்கள் யாவும் சூரியனைக் கண்ட பனித்துளி போல் மறைந்து இன்பவாழ்க்கை அமையும் என்பது அனுபவரீதியான உண்மை.

மஹா மந்திர சக்தி உடைய இறை பாடல்களை நமக்கு அருளிச் செய்த எல்லாம் வல்ல பரம்பொருளாய் திகழும் பரம ஞானி, உபய அருணகிரி என்ற பெயர் பெற்ற, சைவ சித்தாந்த ஞானபானு பாம்பன் ஸ்ரீமத் குமர குருதாச சுவாமிகளே ஆவார். அப்படிப்பட்ட மஹா குருவின் புகழை பரப்புவதற்காக, அவரால் பயனடைந்த பக்தர்கள் ஒன்று சேர்ந்து, மற்றவர்களும் பயனடைய வேண்டும் என்ற உயரிய நோக்கத்துடன் இந்த மஹா கந்த சஷ்டி விரத புனித யாத்திரையை தொடங்கியுள்ளனர். **மஹா கந்த சஷ்டி விரத்தின் போதும், யாத்திரை காலத்திலும் சுவாமிகளின்**

பாடல்களை ஓதிவருவது மிகவும் அவசியம். இது கைவிட முடியாத கடமையுமாகும்.

சஷ்டியின் போது ஓதிபலன் பெறுவதற்காக சுவாமிகளின் பாடல்கள் சிலவற்றை குறப்பிட்டுத் தந்திருக்கிறோம்.

தினமும் பாராயணம் செய்ய வேண்டிய சுவாமிகளின் பாடல்கள்:

1. திருப்புகழ் விநாயகர் துதி
2. குமாரஸ்தவம்
3. சண்முக கவசம்
4. முதல்வன் புராண முடிப்பு
5. சஷ்டி வகுப்பு
6. நவவீரர் கலிவிருத்தம்
7. பரிபூஜன பஞ்சாமிர்த வண்ணம்
8. கட்டியம்
9. திருக்கந்தர் திருபல்லாண்டு
10. திருப்புகழ் - ஆரத்தி (நாதவிந்துகலாதீ )
11. புஷ்ப சமர்ப்பணம்

மேற்கண்ட பாடல்களை ஓதுவது தவிர்க்க முடியாத கடமையாக விரதமிருக்கும் அடியார்கள் கடைபிடிக்க வேண்டும். நேரமும் காலமும் அனுமதிக்கும் வாய்ப்புள்ள அடியார்கள் மேற்குறிப்பிட்ட பாடல்களை ஓதி, பின் சுவாமிகளின் நெல்லையப்பர் பதிகம், கழுகுமலை பாதி கந்தகிரி பாதி, திருவான்மியூர் பதிகம், துக்கரகிதப் பிரார்த்தனை, பிழை பொறுக்க முறையீடு போன்றவற்றையும் பாராயணம் செய்வது சாலச் சிறந்தது. இறுதியாக கட்டியம், மங்களம், பாராயணம் செய்து தூப, தீப ஆராதனை செய்யவும்.

சஷ்டி விரதம் துவக்கும் குருவானவர் நன்றாக மெழுகி சுத்தம் செய்த பூசை அறையில் தர்ப்பப்புல்லை பரப்பி அதன் மீது பன்னீர், சுத்தமான தண்ணீர், தேன், கோமியம், வெட்டிவேர், லவங்கப்பூ, ஜவ்வாது, ஜாதி பத்திரி, ஏலக்காய், பச்சைக் கற்பூரம், ஒரு சிட்டிகை மஞ்சள் தூள் கலந்து நிரப்பிய கலசத்தை வைத்து, மா இலை மேல் தேங்காய் வைத்து,

கலசத்திற்கும் தேங்காய்க்கும் விபூதி சந்தனம் குங்குமம் சாத்தி, மலர்மாலை அணிவித்து கலசங்களை தயார் செய்துக் கொள்ள வேண்டும். முதலில், பாம்பன் சுவாமிகள், முருகப்பெருமான், விநாயகர் மற்றும் நவவீரர்களை கலசத்தில் எழுந்தருளச் செய்து அக்கலசங்களின் முன்னர் அமர்ந்து மேற்கண்ட பாடல்களின் பாராயணத்தையும், தீபாராதனையையும் முடித்து விட்டு, மூல மந்திரம், தியான மந்திரம், மாலை அணிவிக்கும் மந்திரம் ஆகியவற்றை ஓதி, உத்திராட்ச்ச மாலையை அணிந்து கொள்ள வேண்டும். அதே போல் மற்ற அடியார்களுக்கும் இவ்வித மாலை அணிவிக்கும் மந்திரத்தோடு, மூல, தியான மந்திரங்களை ஓதி மாலை அணிவிக்க வேண்டும். விரதம் துவங்கும் அடியார்களில் மிகவும் வயது குறைந்தவர்களுக்கே முதலில் மாலை அணிவிக்க வேண்டும்.

மாலை அணிந்து கொண்டவர்கள் தினமும் இரண்டு வேளை குளிர்ந்த (சாதாரண) தண்ணீரில் குளித்து, சுத்தமான காவி உடைதரித்து நித்திய பாராயணத்தை துவக்கி முடிக்க வேண்டும். ஒரு மண்டலம் (48 நாட்கள்) விரதம் இருக்க வேண்டும். ஒரு நாளைக்கு ஒரு வேளை உணவு மட்டுமே உட்கொள்ள வேண்டும். இயலாதவர்கள் மற்ற இரண்டு வேளைகளில் பால், பழம் போன்றவற்றை சாப்பிடலாம். உடல் நலம் குன்றியவர்கள் உடல் நலத்திற்கேற்ற வகையில் விரதம் மேற்கொள்ளலாம்.

தன்னால் முடியும் என்று நினைப்பவர்கள் சஷ்டியின் 6வது நாள் முழுவதும் ஆகாரம் அகற்றி, வெறும் நீர் மட்டும் அருந்தி, இரவு முழுவதும் தூங்காமல் சுவாமிகள் பாடல்களைப் பாராயணம் செய்து, மறுநாள் (7வது நாள்) மதியம் முருகப் பெருமானுக்கு படையல் செய்து, மகேஸ்வரபூஜை செய்து தானும் உணவு அருந்தினால், விரதம் கடைப்பிடித்தவர்களின் வேண்டுதல் முருகப்பெருமானின் கருணையினால் நிறைவேறும் என்பது அனுபவ வாயிலான உண்மை.

விரத காலத்தில், துயர நிகழ்ச்சிகள் எதிலும் கலந்து கொள்ளக்கூடாது. மற்றவர்களை அழைக்கும் போது "முருகா" என்றே அழைக்க வேண்டும். லாகிரி வஸ்துக்களை உபயோகிப்பது, புலால் உண்பது, தீய கடுமையான வார்த்தைகளைப் பேசுவது போன்றவற்றை அறவே தவிர்க்க வேண்டும். விரத காலத்தில் யாராவது ஏளனம், கிண்டல் செய்தாலும் அது பற்றி கவலை கொள்ளத் தேவையில்லை. சாத்வீகமாக நடந்து கொள்ள வேண்டும்.

பூரண பிரம்மச்சாரியம் விரதத்தின் கண் போன்றதாகும். மாலை அணிந்த அடியார்கள் பாய், பெட் போன்றவற்றை உபயோகிக்கக் கூடாது. துண்டு, துப்பட்டி போன்றவற்றை தனக்கென்று சுத்தமாக தனியாக வைத்து அவைகளையே பயன்படுத்த வேண்டும். தலையணை கூடாது. மணை வேண்டுமானால் தலைக்கு வைத்துக் கொள்ளலாம்.

கல்யாணம், சீமந்தம், மஞ்சள் நீர் போன்ற மங்கள சுபநிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளலாம். தூய்மை கருதி அந்த நிகழ்ச்சிகளில் உணவு உண்ணாதிருத்தல் நலம். அமங்கல நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளக் கூடாது.

மாலை அணிந்த பக்தர்களின் உறவினர்கள் யாராவது மரணமடைய நேர்ந்து அந்நிகழ்ச்சியில் கலந்து கொள்வதானால், மாலை அணிவித்த குருமூலமாகவோ, அல்லது கோயிலிலோ மாலையை கழற்றி, விரதத்தை கலைத்துக் கொள்ளலாம். வீட்டு விலக்கானவர்கள் சமைத்த உணவை விரதமிருப்பவர்கள் சாப்பிடக்கூடாது. அவர்களை தொடுதலும், பேசுதலும் தவிர்க்க வேண்டும்.

1. பெண்கள் 35 வயது நிரம்பிய பின்னரே மாலை அணிந்து கொள்ளலாம்.
2. விரத நாட்களில், யாத்திரையில் காவி 6 நாள் மஞ்சள் பருத்தி (காட்டன்) துணிகளை அணிந்து கொள்ளவும்.
3. வீட்டு விலக்காகும் நாட்களில் வழக்கம்போல் இரண்டு வேளையும் தண்ணீரில் தலை குளித்து பட்டாடை உடுத்த வேண்டும்.
4. 35 வயதிற்கு குறைந்த பெண்கள் 48 நாள் விரதம் மட்டும் இருக்கவும். மாதவிலக்கு முடிந்த பின்பு மாலையணிந்து யாத்திரைக்கு வரவும்.

## பரிபூஜன பஞ்சாமிர்த வண்ண பாடல்களின் தனிச்சிறப்புகள்:

இருதயக் குகையில் உள்ள குஹ பெருமானுக்கு பிரியமான பஞ்சாமிர்த அபிஷேகத்தை செய்ய, "பரிபூஜன பஞ்சாமிர்த வண்ணம்" என்ற ஐம்பெரும் பாடல்களை சுவாமிகள் அருளியுள்ளார்.

பால், தயிர், நெய், சர்க்கரை மற்றும் தேன் ஆகியவை கொண்டு முருகனுக்கு அபிஷேகம் செய்வித்த பலன் தரக்கூடிய ஐந்து பாடல்களையும் ஒரு நிலை மனதுடன் ஓதி, தீபாராதனை செய்தால்,

பஞ்சாமிர்த அபிஷேகம் செய்வித்த பலன் கிடைக்குமென்று சுவாமிகளே கூறியுள்ளார். சர்வ தீய வினைகளையும் அகற்றி, பாப சாபங்களை போக்கி, யோகமும் ஞானமும் கைகூடப் பெறும் என்பது அடியார்களின் அனுபவ உண்மையாகும்.

## பால்

**"இலங்கு நன்கலை"** எனத்தொடங்கும் பாடலைப்பாடி தொழுது அபிஷேகம் செய்தால், கல்வி பயில்வோர் மேன்மை அடைவர், உத்யோக உயர்வு சித்திக்குமென்பதோடு, வழக்குகளில் நன்மை கிடைத்து பயன் பெற்ற அடியார்கள் அதிகம்.

## தயிர்

**"கடித்துணர்"** என தொடங்கும் பாடலைப்பாடி, தயிர் கொண்டு அபிஷேகம் செய்தால், தூய சிந்தனை ஏற்பட்டு, வக்கிர போக்கு மறைவதை உணரலாம். சகோதர ஒற்றுமை நிரந்தரமாகும். கணவன் மனைவி கருத்தொற்றுமை வியக்கும் வண்ணம் அமையும். புத்தி நலன்களோடு இன்பமான வாழ்க்கை பெறலாம்.

## நெய்

**"வஞ்சம் சூதொன்றும் பேர்"** எனத் தொடங்கும் பாடலைப்பாடி நெய் அபிஷேகம் செய்து துதிக்கும் போது, உடல் பிணிகள், மற்றும் வினைப்பயனால் உண்டாகும் வியாதிகள் நீங்கி தேக சுகம் பெறலாம். பெற்றோரின் ஆசி கிட்டும். வரவுக்கு மீறிய செலவு அடங்கி, கடன் சுமை நீங்கி நிம்மதி அடையலாம். சத்ருக்களால் ஏற்படும் மறைமுகமான, மற்றும் நேரடியான இடையூறுகள் நீங்கி சுப காரியங்கள் தடையின்றி நடைபெறும்.

## சர்க்கரை

**"மாதமும் தினம் வாரமும் துதி"** எனத் தொடங்கும் பாடலைப் பாடி சர்க்கரை கொண்டு அபிஷேகம் செய்தால் பித்ரு சாபம் நீங்கும். சண்டை சச்சரவுகள் தணிந்து அமைதி கிட்டும். பய உணர்வு தலை தூக்காது. தொழில்களில் விருத்தியும் லாபமும் நிச்சயமாகும். பரம்பரை வியாதிகளானாலும் நிவர்த்தி அடைந்து தேக சுகம் பெறுவர். இது நாம் அன்றாட வாழ்வில் உபயோகிக்கும் வெண்மையான சர்க்கரை அல்ல. பார்ப்பதற்கு வெல்லத்தை தூள் செய்ததது போலிருக்கும். கடைகளில் இதை நாட்டு சர்க்கரை என்று அழைப்பார்கள்.

## தேன்

"சூலதரனாட" எனத் துவங்கும் பாடலைப் பாடி, தேன் கொண்டு அபிஷேகம் செய்தால் அடையும் பலன் அளவில்லாதது எனலாம்.

சுவாமிகளின் பாடலை பாடி தேனினால் அபிஷேகம் செய்ய 1. மந்திரம், செய்வினை, தீவினை, சூன்யம், ஏவல், போன்ற எவ்வித தீய சக்திகள் வந்தாலும், இருந்தாலும் விலகி ஓடி விடும் என்பது பல அடியார்களின் மாபெரும் அனுபவம் ஆகும். 2. குழந்தை இல்லாதவர்களுக்கு இப்பாராயணத்தால் மழலை செல்வங்கள் ஏற்பட்டு ஆனந்தம் அடைந்தவர்கள் கணக்கிலர். 3. மிக முக்கியம் எவ்வித பிரார்த்தனைகள் வேண்டினாலும், எளிதில் நிறைவேறும் என்பது உறுதி. 4. தொலை தூர பயணங்கள் ஏற்பட்டு நன்மை பயக்கும். வெளிநாடு செல்ல தடை இருப்பவர்களுக்கும், வெளி நாட்டில் உத்தியோகம், தொழில் செய்பவர்களுக்கும் நற்பலன் கிட்டும். 5. மருத்துவர்களுக்கும் நல்ல பெயர், புகழ் கிட்டும் என்பதில் எவ்வித ஐயமும் இல்லை. குருவருள் முருகனின் திருவருள்.

அபிஷேகம் செய்ய திருவுருவச் சிலை வேண்டும். வீட்டில் வைத்து பூஜிக்கப்படும் சிலையானது அங்குஷ்டபிரமாணத்திற்குள்ளாக இருக்குமாறு பார்த்துக் கொள்ள வேண்டும். அங்குஷ்டபிரமாணம் என்பது அந்தந்த வீட்டு தலைவரின் கைவிரல்கள் நான்கை மூடிக்கொண்டு கட்டைவிரல் மட்டும் நேராக இருக்குமாறு வைப்பதாகும். சிலை வாங்கிக் கொள்ள வசதியில்லாதவர்கள் முருகப் பெருமான் மற்றும் பாம்பன் சுவாமிகளின் திருவுருவப்படங்களை வைத்து பாடல்களை பாடி, தூப, தீப ஆராதனைகள் செய்து பயன்பெறலாம்.

(a) சுவாமிகளின் பிரப்பன்வலசை திருக்கோயில் பஞ்சாமிர்த அபிஷேகத்திற்கு தேவையான பால், தயிர், நெய், சர்க்கரை, தேன் ஆகியவற்றில் நெய், சர்க்கரை, தேன் ஆகிய மூன்றையும் அடியார்களின் மும்முடியில் இருந்தும், பால், தயிர் ஆகிய இரண்டையும் பிரப்பன்வலசை திருத்தலத்திலும் ஏற்பாடு செய்து, இவ்வனைத்தையும் ஒன்று சேர்த்து பஞ்சாமிர்த அபிஷேகம் செய்யப்படும்.

(b) மும்முடிக்குத் தேவையான பொருட்கள்:

1. மஞ்சள், 2. குங்குமம், 3. விபூதி, 4. கற்பூரம், 5. ஊதுவத்தி, 6. கற்கண்டு, 7. உலர்ந்த திராட்சை, 8. முந்திரி, 9. தேங்காய், 10. தேன், 11. காலி நெய் டப்பா, 12. பால், 13. தயிர், 14. நெய், 15. சர்க்கரை, 16. தேன், 17. பச்சரிசி, 18. பாசிபருப்பு, 19. நாட்டுச்சர்க்கரை.

மேற்கூறப்பட்ட மும்முடிக்குத் தேவையான பொருட்களில்

1. நெய் முதல் முடியை சேர்ந்ததாகும்.
2. பச்சரிசி, பாசிப்பருப்பு, நாட்டுச் சர்க்கரை – இரண்டாம் முடியைச் சேர்ந்ததாகும்.

அதாவது நம் குருவாகிய பாம்பன் குமரகுருதாச சுவாமிகள் தன் தவ வாழ்நாளில் பச்சரிசி, பாசிப்பருப்பு கலந்து சமைத்த உணவையே உப்பில்லாது மதியம் ஒரு வேளை மட்டுமே உண்டு வாழ்ந்து வந்திருக்கிறார்.

மேற்குறிப்பிட்ட உணவை மட்டுமே உண்டு ஞான அற்புதத்தை சாதித்து, முருகன், அருணகிரிநாதர், அகத்தியர் ஆகிய மூவரையும் நேரில் தரிசித்து, பாக்கியம் பெற்று நமக்காக அற்புத ஞான மந்திர பாடல்களை அருளி செய்துள்ளார். முருகன் அருள் கிடைக்கவும் வழி வகுத்து தந்துள்ளார். ஆகையால் அவருக்கு நன்றி செலுத்தும் பொருட்டு பச்சரிசி, பாசிப்பருப்பு ஆகிய இரண்டையும் மும்முடியில் சுமந்து செல்வது அடியார்களின் தலையாய கடமை ஆகும். மாலை அணிந்து யாத்திரை செல்லும் பக்தர்களின் உறவினர்கள், மற்றும் நண்பர்களின் கையால் யாத்திரை செய்பவரின் மும்முடியில் அபிஷேக பொருட்களை வைக்க யாத்திரை செய்பவரின் பலன் எதுவோ அப்பலன் அவர்களையும் சாரும், மற்றும் நல்வாழ்வு கிடைக்கும்.

அது மட்டும் இல்லாது மாலை அணிந்து விரதம் இருந்து மும்முடியை தலையில் சுமந்து யாத்திரை செல்லும் ஸ்தலத்தில் அனைத்து அடியார்களுடைய மும்முடி பொருட்களை ஒன்று சேர்த்து சமைத்து பிரப்பன் வலசை திருதலத்தில் இறைவனுக்கு படையல் செய்து ஏழை எளியவருக்கு அன்னதானம் செய்வது மாபெரும் சிறப்பு ஆகும்.

பச்சரிசி, பாசிப்பருப்பு ஆகிய இரண்டையும் பக்தரின் மும்முடியில் உறவினர்கள், நண்பர்களின் கையால் போட அவர்கள் இல்லத்தில்

அண்ணபூரணி தான்ய லக்ஷ்மியின் வாசம் நிரந்தரமாகும் என்பது அடியவன் கண்ட உண்மை. இப்பலனை நீங்களும் அடைய வேண்டும் என்பது நோக்கம்.

குறிப்பு: அத்திருத்தலத்தில் அன்னதானத்தில் அரிசியும், பாசி பருப்பும் சேர்ப்பதற்கு முன்பாக அனைத்து பக்தர்களும் அதில் ஒரு பிடி அரிசி, பாசி பயிறு கொஞ்சம் நாட்டு சர்க்கரை ஆகியவற்றை எடுத்து ஒரு முடியாக்கி அப்பிரசாதங்களை வீட்டிற்கு கொண்டுவந்து அதனுடன் தேவையான அளவு அரிசி கலந்து சர்க்கரை பொங்கல் செய்து நெய் நெய்வேத்தியம் ஆராதனை செய்து வழிபட்டு தாயாரிடத்திலோ தந்தை இடத்திலோ, 10 வயதுக்கு உட்பட்ட குழந்தைகளிடத்திலோ, (அல்லது) கோயில் அர்ச்சகரிடத்திலோ குருவினிடத்திலோ மாலை கழட்டி விரதத்தை முடிக்கலாம்.

1. குங்குமம், 2. விபூதி, 3. கற்பூரம், 4. ஊதுவத்தி, 5. கற்கண்டு, 6. உலர்ந்த திராட்சை, 7. காலி நெய்டப்பா, 8. முந்திரி, 9. தேங்காய், 10. தேன் இப்பொருட்கள் அத்தனையும் மூன்றாவது முடியை சார்ந்தது.

மூ ன்றாவது முடியில் தேங்காய் நீங்கலாக மற்ற பொருட்கள் அதனு  தனிதனியாக பாக்கெட் செய்து இருக்கும். கற்கண்டு, திராட்சை, முந்திரி ஆகியவற்றை நைவேத்தியமாகவும், விபூதி, குங்குமம், கற்பூரம், நெய் ஆகியவற்றை அபிஷேகம் செய்தும் நமக்கு தருகின்ற பிரசாதங்களை நாமும் அணிந்து அதனை ஒருமுடியாக்கி வீட்டிற்கு கொண்டுவந்து படையல் முடித்து, மாலை கழற்றி விரதம் முடித்து கலசநீர் வீட்டில் தெளித்து பிறகு உறவினர்களுக்கும் மற்றவர்களுக்கும் பிரசாதங்களை கொடுக்கவும். பிரசாதங்கள் குறைந்திருக்கும் என்பதால் எடுத்து வந்த பிரசாதங்களுடன் இன்னும் கொஞ்சம் வெளியில் வாங்கி கலந்து பிறகு அனைவருக்கும் கொடுக்கலாம்.

இதில் மிகவும் முக்கியம், உடல் நிலை சரியில்லாதவர்களுக்கும் பல காரணங்களை பிரார்த்தனை செய்து கொண்டாலும் காரிய தடை உள்ளவர்களும் விபூதி பிரசாதம் நெற்றியில் இட்டும் உள்ளுக்கு அருந்தவும். நெய்யும் கூட குழந்தைகளுக்கு ஏற்படும் சர்வ தோஷ நிவாரணம். இத்திரு நெய் உள்ளுக்கு கொடுக்க நல்ல பயன் கிடைக்கும்.

தேங்காய் ஒன்று சைடு பேக்கில் வைத்துக் கொண்டு அத்திருத்தலத்தில் வாயிலில் நுழையும் பொழுது வாயில்படியில் மும்முடி சுமந்து கொண்டு சூர தேங்காய் உடைத்து பிறகு கோயிலில் அரோகரா அரோகரா என்ற ஓசையுடன் நுழையவும்.

பிறகு குருசாமி அங்கு மும்முடி பிரித்து அதில் இருந்து அனைத்து பக்தர்களுக்கும் ஊதுபத்தி கொடுப்பார். அதனை ஏற்றி அத்திருத்தலத்தில் பிரதக்ஷணமாக 6 முறை சுற்றி வரவும். பிறகு அபிஷேகம் கண்டு பாராயணம் செய்து பயனுரவும்.

**வீட்டில் இருந்து புறப்படுவதற்கு முன்பு வீட்டில் செய்ய வேண்டிய முறைகள்:**

விரதம் இருந்து, மும்முடி அணிய வீட்டில் இருந்து புறப்படுவதற்கு முன்பு குளித்து தாங்கள் கொலு வைத்திருக்கும் கலசத்திற்கு பச்சரிசி, பாசி பயிறு பொங்கல் வடை பாயசத்துடன் பிரசாதமாக வைத்து, பாராயணம் செய்து சட்டை இல்லாது பூஜிக்க வேண்டும்.பூஜை முடிந்ததும் குறைந்தது 6 ஏழைகளுக்கு அன்னம் அளித்து தாங்களும் சாப்பிடலாம் அல்லது முடிந்தவர்கள் மும்முடி கட்டும் வரை விரதம் இருக்கலாம்.

பின்பு தங்களுக்கு தேவையான ஆடைகள், பணம் முதலியவற்றையும் பத்திரபடுத்தி, கையில் ஒரு தேங்காய் எடுத்து கற்பூரம் வைத்து கலசத்திற்கு முன்பாக காட்டி வலது பக்கம் மூன்று முறை இடது பக்கம் மூன்று முறை சுற்றி பிறகு பின் நோக்கியே கற்பூரம் எரியும்படி தேங்காயை கையில் வைத்து வீட்டிற்கு வாயிற்படி முன்பாக நின்று கொண்டு மூன்று முறை தேங்காய் சுற்றி வீட்டின் முன்பாக சூரகாய் உடைத்து விட்டு திரும்பி பார்க்காமல் புறப்பட வேண்டும். மும்முடி கட்டும் இடத்திற்கு உறவினர்கள் நண்பர்கள் வந்து அரிசி, பாசி பருப்பு போடலாம்.

வீட்டில் யாத்திரை செய்யும் பக்தர்கள் புறப்பட்ட நாளில் இருந்து மீண்டும் வரும் வரை வீட்டில் உள்ள கலசத்திற்கு முன்பாக தாய், தந்தை, மனைவி, மக்கள், உறவினர்கள், நண்பர்கள் யாராவது ஒருவர் தீபம் ஏற்றி வைத்து இப்புத்தகத்தில் உள்ள மந்திர பாடல்களை பாராயணம் செய்து கொண்டு இருக்கவும். இம்முறை மிகப்பெரிய பலன் அளிக்கும் என்பதில் எவ்வித ஐயமும் இல்லை.

## 1. மூலமந்திரம்

அண்டமன் றாய வரும்பொதி யுள்ளும்
பிண்டமன் றாய பெரும்பொதி யுள்ளுங்
கண்டவர் துன்பு கடிந்துய வாடுஞ்
சண்டனை நீத்த தவங்களு முளவோ

அண்ட தகராலயமாகிய அரிய சபையிலும், பிண்ட தகராலயமாகிய பெரிய சபையிலுந் தன்னைத் தரிசித்தோர் துக்கநிவர்த்தி யெய்தி ஆனந்தப்பேறடைந்து பிழைக்கும் வண்ணம் நிர்த்தனஞ் செய்யுஞ் சிவசூரியனைக் கைவிட்டுச் செய்யுந் தவங்களும் உள்ளனவோ.

இந்நேர்மையி லண்டமு ளேசிறுபிண்
டமுமேயத னுள்ளிறை யண்டமுமே
எந்நாளிலு முண்டிலி ராசியநே
ரேநீயறி தற்குந டேசனையென்
மன்னாகிரு பாகர வானவனே
மாதேவகு கேசப ராபரனே
தன்னேரிலி யேயடி யார்நலனே
தாதாவடி யென்றுதொ ழாய்தினமே

இவ்வுடன் பாட்டில் அண்டத்தினுள்ளே சிறிய பிண்டமும், அப் பிண்டத்தினுள்ளே பெரிய அண்டமும் எக்காலத்திலுமுண்டு. இவ்விரகசியத்தை நேரே நீயறிய நடேசப் பெருமானை நாடோறும் என்னரசனே! கிருபைக்குறைவிடமாயுள்ளவனே! பரமாகாசத்திருப்பவனே! மகாதேவனே! குகேசனே! பராபரனே! சமானரகிதனே! அடியார்களுடைய செல்வமே! உன்றிருவடியை (அடியேனுக்குத்) தருவாயாக தருவாயாகவென்று சொல்லித் (துதித்து) தொழுவாயாக.

அண்டம் போலப் பிண்டமும், பிண்டம் போல அன்டமுமிருத்தலின் "அண்டமுளே சிறுபிண்டமும் அதனுள் இறையண்டமும் எந் நாளிலுமுண்டு" என்றனர். இவ்வுண்மை – "வலங்கைமான் மழுவோன் போற்றும் வாளர வரசை நோக்கி – அலைந்திடும் பிண்ட மண்ட மவைசம மாத லாலே" எனக் கோயிற்புராணத்துங் கூறப்பட்டது.

**மாலை போடும் பொழுது சொல்ல வேண்டிய மந்திரம்:**

ஓம் ஞானமுத்ராம், சாஸ்த்ருமுத்ராம், குரு முத்ராம், நமாம்யஹம் கிரிநாத முத்ராம், சுத்த முத்ராம், அறுமுக முத்ராம், நமாம்யஹம்

**சாந்த முத்ராம், ஸத்திய முத்ராம், விரதமுத்ராம் நமாம்யஹம்**
**ஷண்முகானந்த பரமாத்ம யக்ஞய முத்ராம் பாதுஸதாபிமே**
**குருதக்ஷிணாயபூர்வம் தஸ்யாநூக்ரஹகாரிணே**
**சரணாகதமுத்ராக்யம், தவனம்முத்ராம்**
**தாரயாம்யஹம் சரவணபவாய ஹரீம்**
**முத்ராகியம் நமோ நமாம்யஹம்**
**ஷஷ்டி நாயகாசனம், முத்ராயை, நமஸ்துப்யம் நமோநம.**

இம்மந்திரத்தை சொல்லி – உரத்த குரலில் மூன்று முறை அரோகரா என்ற ஓசையுடன் ப்ரார்த்தனை, செய்து முன்னோர் ஆசியுடன், மாலை அணியவும். (படிக்க தெரியாதவர்கள் குருவை 3 முறை, முருகனை மூன்று முறை தியானித்து மாலை போடலாம்.)

**இப்பொழுது விரதம் முடிக்கும் முறையைப் பற்றி பார்ப்போம்:**

திரு பிரப்பன்வலசை கோயிலிருந்து எடுத்து வந்த ஒரு முடியை நீங்கள் நிருத்தி வைத்திருக்கும் கலசத்திற்கு முன்பாக பிரித்து அதனுள் இருக்கும் அரிசியை எடுத்து சர்க்கரை பொங்கல் செய்து மற்ற பிரசாதங்களையும் கலசத்திற்கு முன்பு வைத்து நீராடி வந்து பாராயணம் செய்து தேங்காய் உடைத்து தீபாராதனை காட்டி கலசம் கலைத்து அதில் உள்ள புனித நீரை வீட்டிலும் தங்கள் மீதும் தெளித்து பிறகு தாய், 10 வயதிற்குட்பட்ட குழந்தைகள் அல்லது கோயில் அர்ச்சகர்களை கொண்டு மாலை கழற்றவும். விரதம் முடிக்கவும்.

**குருவானவர் மாலை கழட்டும் போது சொல்ல வேண்டிய மந்திரம்:**

**ஓம் அபூர்வ மஸ்லாரோஹ, திவ்ய தரிசன**
**காரண ஷண்முக முத்ராத மகா தேவ,**
**தேஹிமே விரதவிமோசனம்!**

என்று மூன்று முறை சொல்லி அரோகரா என்ற நாதத்துடன் மாலை கழட்டவும்.

கலசத்தில் உள்ள புனித நீரை தங்களுக்கு தேவைபட்டவர்களிடம் கொடுத்து அவர்கள் வீட்டிலும் தெளிக்க கொடுக்கலாம். இப்புனித நீர் வீட்டில் உள்ள அத்தனை தீவினைகளையும் அகற்றி விடும்.

குறிப்பு : யாத்திரை முடித்து வரும் பக்தர் தங்கள் வீட்டு வாயிலில் வைத்து ஆலம் கரைத்து ஆரத்தி எடுத்து உள்ளே அழைக்கவும்.

## மும்முடி கட்டும் முறை

முற்றிய தேங்காய் வாங்கி அதன் குடுமியை எடுத்து விட்டு அதனை உப்பு காகிதம் கொண்டு மழ மழ வென்று தேய்க்கவும். பின்னர் தேங்காயின் மூன்று கண்களில் ஏதாவதொரு கண்ணை திறந்து உள்ளிருக்கும் நீரை சுத்தமாக வெளியேற்றிவிடவும். பின்னர் அத்தேங்காய் மீது தண்ணீரில் குழைத்த விபூதியைப் பூசி காய விடவும் காய்ந்த பின்னர், தேங்காயின் திறந்த கண்ணை கார்க் கொண்டு இருக்கமாக மூடும் படி செருகி அடுக்கி வைக்கவும். இதற்கு முத்திரை தேங்காய் என்று பெயர்.

பிறகு இம்முத்திரை தேங்காயினை மும்முடிகட்டும் பொழுது யாத்திரை செய்யும் பக்தர்களின் கையில் கொடுத்து, மூடியுள்ள கார்க்கை எடுத்துவிட்டு திறந்த கண் மூலமாக நெய் நிரப்பச் சொல்லி, நிரம்பிய பின்னர் கார்க்கைத் தேங்காய்க் கண்ணில் முன்போல் மிகவும் இருக்கமாக மூடி மீதம உள்ள கார்க்கை தேங்காய்க்குச் சமமாக வெட்டிய பின், அக்கார்க்கை அரக்கு சீல் வைத்து, அந்த அரக்கின் மீது முருகன் முத்திரை பதிக்க வேண்டும்.

மேலும் ஒரு காடா துணியை, தேங்காயின் மூன்று கண்ணையும் மூடுமளவுக்கு துண்டாக்கி, தேங்காய் மீது பசை தடவி ஒட்டிவிடவும். இந்த தேங்காயை மும்முடியில் உள்ள ஒரு தனிப்பையில் வைக்கவும்.

இன்னொரு சிறிய தேங்காயை சுமாராக சுத்தம் செய்து யாத்திரை செல்லும் பக்தர்களின் சைடு பையில் வைத்துக் கொள்ள கொடுக்கவும். இந்த தேங்காயை, பிரப்பன் வலசை திருத்தலத்தின் வாயிலில் சூரை காயாக உடைத்து விட்டு கோயில் உள்ளே செல்ல வேண்டும்.

அடுத்து அமர்ந்திருக்கும் குருசாமியிடம் பச்சரிசியும், பாசிப்பயிறுப் பாக்கெட்டும் இருக்கும். யாத்திரை செல்பவர் தனது மும்முடிப் பையில் பாம்பன் சுவாமிகள் படம் உள்ள பையில் யாத்ரீகரின் உறவினர், நண்பர்கள், வேண்டியவர்கள் என குருசாமியிடம் அரிசியைக் கொஞ்சம் கொஞ்சமாக வாங்கி உள்ளே போட வேண்டும். அவ்வாறு அரிசி நிரப்பும் அடியவர்களும், பாம்பன் சுவாமிகளிடமும், முருகப் பெருமானிடமும்

தங்களது விசுவாசமிக்க பக்தி கலந்த வேண்டுதலை வைப்பதன் மூலம் குருவருளும், திருவருளும் கிட்டும். வேண்டுதல் சித்திக்கும்.

மூன்றாவதாக குருசாமியிடத்தில் அபிஷேக சாமான்கள் மற்றும் காலி நெய்டப்பா ஆகியவை இருக்கும். இவற்றை மூன்றாவது முடிப்புக்கான பையில் வைத்து மூன்று முடியையும் ஒன்று சேர்த்து மும்முடியாக கட்டுவார்.

மும்முடி கட்டியதும், அங்கே பாம்பன் சுவாமிகள் படம் மற்றும் முருகப் பெருமான் படமும் இருக்கும் அதன் முன்பாக மண்டி போட்டு அமர வேண்டும். அமர்ந்து பக்தரின் தலையில் புதிய பெட் ஷீட் அல்லது புதிய துண்டு வைத்து அதன் மேல் குருசாமி மும்முடியை வைப்பார். தலைமேல் வைக்கப்பட்ட மும்முடிப்பையை இருகைகளாலும் பிடித்துக் கொண்டு, பக்தர் எழுந்து நின்று வலது புறமாக மூன்று முறை சுற்றிக் கொண்டே இறைவனைத் தொழுத வண்ணம் அங்குள்ள கோயிலை வலம் வந்து முடியை இறக்க வேண்டும். மும்முடியை இறக்கி வைக்கும் இடத்தில் ஏற்கனவே சுத்தமான பெட்ஷீட் பரப்பிவைக்க வேண்டும்.

குறிப்பு : இரண்டாவது குருசாமி, அரிசி நிரப்புவதற்கு முன்பாக, யாத்ரீகரிடம் ஓர் எலுமிச்சை பழம் தர வேண்டும். இந்த பழத்தை, யாத்ரீகர் தனது மும்முடியை கட்டும் இடத்தில் உள்ள கோயில் வலம் வந்து இறக்குமுன் பக்கத்தில் உள்ளவர்களிடம் கொடுத்து சுற்றிப் போட்ட பிறகு தான் மும்முடி இறக்க வேண்டும். இதே போல், குருசாமியிடம் அரிசி நிரப்பப்பட்ட பின்னர், குருசாமி தன்னிடமுள்ள ஒரு பாக்கெட் பாசிப் பயிற்றையும் சேர்த்திட மறக்கக் கூடாது - இரண்டாம் முடியில்.

குருசாமியிடம் சுமாராக சுத்தம் செய்த தேங்காய் ஒன்று வாங்கி யாதரீகர் தனது சைடு பையில் வைத்துக் கொள்ள வேண்டும். ஏற்கனவே சொன்னது போல், இந்த தேங்காய் பிரப்பன் வலசை ஆலய வளாகத்தினுள் நுழையும் முன்பாக வாயிற்படியில் சிதறுகாயாக உடைத்துவிட்டு உள்ளே செல்லவும்.

மும்முடிகட்டும் இடம் மற்றும் அமைப்பு:

மும்முடி கட்டும் வைபவம் நடக்கும் இடம் ஒரு முருகர் கோயிலாக இருத்தல் நலம் அல்லது ஈஸ்வரன் கோயிலாகவும் இருக்கலாம். இவைகள்

அமையாத இடத்தில் சத்திரத்தில் வைத்து ஏற்பாடு செய்யலாம். அந்த இடத்தில் பெரிய அளவிலான பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சாமிகள் படம் ஒன்றும் முருகப் பெருமான் படம் ஒன்றும் வைத்து அலங்கரிக்க வேண்டும். முருகப்பெருமானின் படம் சற்று உயரத்திலிருக்க, அதன் கீழ் ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளின் படத்தை வைத்து அலங்கரிக்க வேண்டும். மேற்கண்ட அலங்காரம் செய்யப்பட்ட படங்களின் முன்பாக மூன்று குருசாமிகளும் அமர்ந்து, நெய், பச்சரிசி, பாசிப்பயிறு பாக்கெட், நாட்டு சர்க்கரை பாக்கெட், தேன், ஊதுவத்தி, கற்பூரம், குங்குமம், விபூதி, கற்கண்டு, பன்னீர் பாட்டில் ஆகியவை அடங்கிய ஒரு பாக்கெட், ஒரு காலிடப்பா (பிரப்பன் வலசையிலிருந்து அபிஷேக நெய் பிரசாதம் கொண்டு வருவதற்கு) சூரை தேங்காய், எலுமிச்சை பழம், தைத்து வைத்துள்ள மும்முடியை, யாத்ரீகரின் கழுத்து மாலைகள் ஆகிய அனைத்தும் வைத்துக் கொள்ள வேண்டும். நெய் ஊற்ற வசதியான டம்ளர், அதன் கீழ் வைக்க தட்டு ஆகியவை வைத்துக்கொள்ள வேண்டும்.

மேற்கண்ட அனைத்தும் தயார் நிலையில் வைத்துக் கொண்டு பாராயணம் செய்து பின்னர் மும்முடி கட்ட துவங்க வேண்டும். மும்முடி கட்டும் குருமார்கள் உபவாசமிருப்பார்கள். மும்முடிகள் கட்டி முடித்த பின்னரே விரதம் முடிப்பார்கள். இடையில் பால், பழம் போன்றவை எடுத்துக் கொள்ளலாம்.

யாத்ரீகர் அனைவருக்கும் மும்முடி கட்டி முடித்த பின்னர் கடைசியில் குருவானவர் தனக்கு மும்முடி கட்டிக் கொண்டு மும்முடியை தலையில் ஏந்தியபடி முன்னின்று சாமி படங்களுக்கு தீபாராதனை செய்து, அத்தீபாராதனை தட்டுடன், தீபம் எரியும்படி கையில் வைத்துக் கொண்டு கோயிலைச் சுற்றிவந்து பிறகு ஏற்கனவே இறக்கிவைத்துள்ள அனைத்து மும்முடிகளுக்கும் தீபாராதனை செய்து விபூதி போட்டு புறப்பாடு செய்யவும்.

குறிப்பு : தனியாக ஒருவர் இந்த விரத யாத்திரை செய்தாலும், மேற்கண்ட முறைகளை கடைப்பிடித்து செய்யலாம்.

**அடியார்களுக்கும் பக்தர்களுக்கும் அடியேனின் கருத்து:**

இப்புத்தகத்தில் உள்ள வழிபடு முறைகள், யாத்திரை எல்லாம் யான் கண்ட உண்மைகள். கற்பனையல்ல. யான் பெற்ற நற்பலன்களை

அனைத்து அடியார்களும் பெற வேண்டும் என்ற நல்ல நோக்கத்தோடும், நமது ஜகத்குரு, பாம்பன், ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகளின் புகழ் நானிலமெங்கும் தடையின்றி பரவிடவும் இந்த சஷ்டியாத்திரையை தொடக்கியுள்ளேன். பக்தி சிரத்தையுடனும், வாத்சல்ய விஸ்வாசத்தோடும் ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளை வழிபடும் பக்தர்களின் வேண்டுகோள் எதுவாயினும் யாத்ரீகர், அடுத்த யாத்திரைக்குள் கைவரப் பெறுவார் என்பது அனுபவ பூர்வமான உண்மை. சத்தியம். யாத்திரையின் முடிவில் குருவருளும் திருவருளும் சித்திக்கும்.

பக்தர்கள் மாலை அணிந்து விரதம் இருக்கும் காலத்தில் யாராவது குறை சொன்னாலோ, கேலி செய்தாலோ அதற்குரிய பலன்களை அவர்கள் அனுபவரீதியாக உணர்வார்கள் என்பதில் ஐயமில்லை.

சஷ்டிவிரத யாத்திரை செய்து பலன்பெற்ற பக்தர்கள் நடந்த உண்மைகளை தயவு கூர்ந்து உறவினர்கள், நண்பர்கள் மற்றும் அடியவர்களிடம் சொல்வதன் மூலம் அவர்களையும் பாம்பனடிமை களாக்குவதும் முருகன் அருள் கிடைக்க வழி காட்டுவதும் மிகப் பெரிய தொண்டாகும். வழிபடும் நாம் நம் குருவுக்குச் செய்யும் நன்றிக்கடனும் சேவையும் ஆம்.

அடியவன் தனிப்பட்ட புகழுக்கோ, பெயருக்கோ இந்த யாத்திரையைத் தொடங்கவில்லை. காசு பணம் வேண்டியும் இல்லை. நானும் என் சம்பந்தப்பட்ட அனைவரும் தினம் தினம் எங்களின் வாழ்வில் ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளின் மாபெரும் அற்புத கருணாகடாக்ஷத்தை அனுபவித்துவருகிறோம். ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளின் பாடல்களைப் பாராயணம் செய்து முருகப் பெருமானைத் தொழுது, அருள்பெற்று, இன்புற்று, வாழ்ந்து வரும் எங்களைப் போலவே அனைவரும் சஷ்டிவிரத யாத்திரையை முறையாகச் செய்வதன் மூலம் அடைய வேண்டுமென்பதே எனது குறிக்கோள்! ஆவல்!

முதலாம் ஆண்டு இந்த கந்த சஷ்டி விரத யாத்திரைகளில் சுமார் 60 அடியார்கள் கலந்து கொண்டு அவர்களின் அன்பிற்குப் பலனாக அற்புதமான முன்னேற்றங்களை கண்டுள்ளனர். இது குறித்த தொகுப்பு

ஒன்று அடுத்து ஆண்டு வெளிக்கொணர எல்லாம் வல்ல பாம்பன் சுவாமிகள் அருள்பாலிக்க வேண்டுகிறேன்.

இப்புத்தகத்தை வெளிக்கொணர உறுதுணையாக இருந்து வடிவமைத்த என் தந்தைக்கு நிகரான என் மாமனார் பாம்பனடிமை ஆறுமுகம் அவர்களுக்கும், இதனை வெளியிடப் பொருளுதவி செய்து ஊக்கு வித்த நல்ல உள்ளத்திற்கும், ஏனையோற்கும் அடியேன் என்றும் கடமைப்பட்டவனாக குருவினிடத்தில் வேண்டி நிற்பேன்.

மற்றும் ஆறு ஆண்டுகளாக இந்த யாத்திரையில் அடியேன் சொல்படி கேட்டு மாலை அணிந்து, விரதமிருந்து யாத்திரையில் கலந்து கொண்டவர்களின் அனுபவங்களை உணர்ச்சி பொங்க, பாசத்தோடும், அன்போடும் பக்தியோடும் விவரித்த அனைத்து அடியார்களுக்கும் குரு ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளும், முருகப்பெருமானும் உடனிருந்து காத்து உதவிட என்றென்றும் அவன் தாள் பணிந்து நிற்கிறேன்.

மேலும் நீண்ட ஆயுளும், நல்ல உடல் நலனும், சர்வ ஐஸ்வர்யங்களும் சித்திக்க அனைவருக்காகவும் வேண்டி நிற்பேன் என்பது உறுதி. இதேபோல் இனிவரும் அடியார்களும், யாத்ரீகர்களும் குருவருளும், திருவருளும் பெற்று பெருவாழ்வு வாழ வேண்டி நிற்பேன்.

இப்புத்தகத்தை அற்புதமாக பக்தி மணம் கமழ அச்சிட்டு வெளிக் கொணர்ந்த ஆத்ம நண்பர் என் அன்பிற்குரிய திருவாளர் பழனி கணேசனார் அவர்கள் எல்லாவித வளங்களையும், நலன்களையும் பெற்று வாழ குருவை வேண்டி நிற்கிறேன். குருவருள் கிடைக்கட்டும்!! பெருவருள் அமையட்டும் அன்னார் குடும்பத்திற்கே!!

குருவருள் வாழ்க! திருவருள் வாழ்க! இவன்

அன்பன்,

தவராஜயோகி பாம்பன் அருட்சித்தர்

சஞ்சீவி இராஜா சுவாமிகள்

காஞ்சிபுரம்.

செப்டம்பர் 2010

அவர்களின் அருளாணைப்படி

குரு



விநாயகர்



முருகன்





வீரவாகுதேவர்





வீரதீரதேவர்

வீரகேசரிதேவர்

**நவவீரர்கள்**





வீராந்தகதேவர்

வீரமகேந்திரதேவர்





வீரமார்த்தாண்டதேவர்

வீரமகேசதேவர்











வீரராக்கததேவர்

வீரபுரந்தரதேவர்







## மாலை அணிந்து, விரதம் கடைப்பிடிக்கும் பக்தர்கள் வீட்டில் கலசம் நிறுத்தி வணங்க வேண்டிய முறை

குரு



விநாயகர்



முருகன்



குறிப்பு : சஷ்டி விரதம் துவங்கும் பக்தரானவர் கலசம் அமைக்கும் போது நன்றாக மெழுகி சுத்தம் செய்த பூசை அறையில் தர்ப்பப்புல்லை பரப்பி அதன் மீது பன்னீர், சுத்தமான தண்ணீர், தேன், கோமியம், வெட்டி வேர், லவங்கப்பூ, ஜவ்வாது, ஜாதி பத்திரி, ஏலக்காய், பச்சைக் கற்பூரம், ஒரு சிட்டிகை மஞ்சள் தூள் கலந்து நிரப்பிய கலசத்தை வைத்து, மா இலை மேல் தேங்காய் வைத்து, கலசத்திற்கும் தேங்காய்க்கும் விபூதி சந்தனம் குங்குமம் சாத்தி, மலர்மாலை அணிவித்து கலசங்களை தயார் செய்துக் கொள்ள வேண்டும். முதலில் பாம்பன் சுவாமிகள், முருகப் பெருமான், விநாயகரை கலசத்தில் எழுந்தருளச் செய்து, அக்கலசங்களின் முன்னர் அமர்ந்து பாராயணம் செய்து வழிபடவும்.

## திருப்புகழ்

## விநாயகர் துதி

உம்பர் தருத் தேனு மணிக் கசிவாகி
ஒண்கடலில் தேன் அமுதத்து உணர்வு ஊறி
இன்பரசத்தே பருகிப் பலகாலும்
என்றன் உயிர்க்கு ஆதரவு உற்று அருள்வாயே
தம்பிதனக்காக வனத்து அணைவோனே
தந்தை வலத்தால் அருள்கைக் கனியோனே
அன்பர் தமக்கு ஆன நிலைப் பொருளோனே
ஐந்து கரத்து ஆனைமுகப் பெருமாளே.

உ

ஓம் குமரகுருதாச குருப்யோ நம:

குமாரஸ்தவம்

1. ஓம் ஷண்முக பதயே நமோ நம:
2. ஓம் ஷண்மத பதயே நமோ நம:
3. ஓம் ஷட்க்ரீவ பதயே நமோ நம:
4. ஓம் ஷட்கிரீட பதயே நமோ நம:
5. ஓம் ஷட்கோண பதயே நமோ நம:
6. ஓம் ஷட்கோச பதயே நமோ நம:
7. ஓம் நவநிதி பதயே நமோ நம:
8. ஓம் சுபநிதி பதயே நமோ நம:
9. ஓம் நரபதி பதயே நமோ நம:
10. ஓம் ஸூரபதி பதயே நமோ நம:
11. ஓம் நடச்சிவ பதயே நமோ நம:
12. ஓம் ஷடக்ஷர பதயே நமோ நம:
13. ஓம் கவிராஜ பதயே நமோ நம:
14. ஓம் தபராஜ பதயே நமோ நம:
15. ஓம் இஹபர பதயே நமோ நம:

16. ஓம் புகழ்முனி பதயே நமோ நம:
17. ஓம் ஜயஜய பதயே நமோ நம:
18. ஓம் நயநய பதயே நமோ நம:
19. ஓம் மஞ்சுள பதயே நமோ நம:
20. ஓம் குஞ்சரீ பதயே நமோ நம:
21. ஓம் வல்லீ பதயே நமோ நம:
22. ஓம் மல்ல பதயே நமோ நம:
23. ஓம் அஸ்த்ர பதயே நமோ நம:
24. ஓம் சஸ்த்ர பதயே நமோ நம:
25. ஓம் ஷஷ்டீ பதயே நமோ நம:
26. ஓம் இஷ்டி பதயே நமோ நம:
27. ஓம் அபேத பதயே நமோ நம:
28. ஓம் ஸுபோத பதயே நமோ நம:
29. ஓம் (வ்)வியூஹ பதயே நமோ நம:
30. ஓம் மயூர பதயே நமோ நம:
31. ஓம் பூத பதயே நமோ நம:
32. ஓம் வேத பதயே நமோ நம:
33. ஓம் புராண பதயே நமோ நம:
34. ஓம் (ப்)பிராண பதயே நமோ நம:
35. ஓம் பக்த பதயே நமோ நம:
36. ஓம் முக்த பதயே நமோ நம:
37. ஓம் அகார பதயே நமோ நம:
38. ஓம் உகார பதயே நமோ நம:
39. ஓம் மகார பதயே நமோ நம:
40. ஓம் விகாச பதயே நமோ நம:
41. ஓம் ஆதி பதயே நமோ நம:
42. ஓம் பூதி பதயே நமோ நம:
43. ஓம் அமார பதயே நமோ நம:
44. ஓம் குமார பதயே நமோ நம:

## சண்முக கவசம்

அண்டமாய் அவனி ஆகி அறியொணாப் பொருளது ஆகித்
தொண்டர்கள் குருவும் ஆகித் துகள்அறு தெய்வம் ஆகி
எண் திசை போற்ற நின்ற என் அருள் ஈசன் ஆன
திண்திறல் சரவணத்தான் தினமும் என் சிரசைக் காக்க. 1

ஆதி ஆம்கயிலைச் செல்வன் அணி நெற்றி தன்னைக் காக்க
தாது அவிழ் கடப்பம் தாரான் தான் இரு நுதலைக் காக்க
சோதி ஆம் தணிகை ஈசன் துரிசுஇலா விழியைக் காக்க
நாதன் ஆம் கார்த்திகேயன் நாசியை நயந்து காக்க. 2

இருசெவிகளையும் செவ்வேள் இயல்புடன் காக்க, வாயை
முருகவேள் காக்க நாப் பல் முழுவதும் நல் குமரன் காக்க
துரிசு அறு கதுப்பை யானைத் துண்டனார் துணைவன் காக்க
திருவுடன் பிடரி தன்னைச் சிவசுப்பிரமணியன் காக்க. 3

ஈசன் ஆம் வாகுலேயன் எனது கந்தரத்தைக் காக்க
தேசுஉறு தோள்விலாவும் திருமகள் மருகன் காக்க
ஆசு இலா மார்பை ஈர்ஆறு ஆயுதன் காக்க என்றன்
ஏசுஇலாமுழங்கை தன்னை எழில் குறிஞ்சிக்கோன் காக்க. 4

உறுதியாய் முன்கை தன்னை உமைஇள மதலை காக்க
தறுகண் ஏறிடவே என்கைத் தலத்தை மா முருகன் காக்க
புறங்கையை அயிலோன் காக்க பொறிக்கர விரல்கள் பத்தும்
பிறங்குமால்மருகன் காக்க பின் முதுகைச் சேய் காக்க. 5

ஊன் நிறை வயிற்றை மஞ்ஞை ஊர்தியோன் காக்க வம்புத்
தோள்நிமிர் சுரேசன் உந்திச் சுழியினைக் காக்க குய்ய
நாணினை அங்கி கௌரி நந்தனன் காக்க பீஜ
ஆணியைக் கந்தன் காக்க அறுமுகன் குதத்தைக்காக்க. 6

எஞ்சிடாத இடுப்பை வேலுக்கு இறைவனார் காக்க காக்க
அம்சகனம் ஓர் இரண்டும் அரன்மகன் காக்க காக்க
விஞ்சிடு பொருள் காங்கேயன் விளர் அடித் தொடையைக் காக்க
செம்சரண் நேச ஆசான் திமிரும் முன்தொடையைக் காக்க. 7

ஏரகத் தேவன் என்தாள் இருமுழங் காலும் காக்க
சீருடைக் கணைக்கால் தன்னைச் சீரலை வாய்த்தே காக்க
நேர்உடைப் பரடு இரண்டும் நிகழ் பரங்கிரியன் காக்க
சீரிய குதிக்கால் தன்னைத் திருச்சோலைமலையன் காக்க. 8

ஐஉறு மலையன் பாதத்து அமர்பத்து விரலும் காக்க
பை உறு பழநிநாதபரன் அகங்காலைக் காக்க
மெய்யுடல் முழுவதும் ஆதி விமல சண்முகவன் காக்க
தெய்வநாயக விசாகன் தினமும் என் நெஞ்சைக்காக்க. 9

ஒலிஎழ உரத்த சத்தத்தொடுவருபூதப்பிரேதம்
பலிகொள இராக்கதப்பேய் பல கணத்து எவை ஆனாலும்
கிலிகொள எனைவேல் காக்க கெடுபரர் செய்யும் சூன்யம்
வலிஉள மந்த்ர தந்த்ரம் வருத்திடாது அயில் வேல் காக்க. 10

ஓங்கிய சீற்றமே கொண்டு உவணிவில் வேல் சூலங்கள்
தாங்கிய தண்டம் எஃகம் தடிபரசு ஈட்டி ஆதி
பாங்குடை ஆயுதங்கள் பகைவர் என்மேலே ஓச்சின்
தீங்கு செய்யாமல் என்னைத் திருக்கைவேல் காக்க காக்க. 11

ஔவியம் உளர் ஊன் உண்போர் அசுரர்பேய் அரக்கர் புல்லர்
தெவ்வர்கள் எவரானாலும் திடமுடன் எனை மல்கட்டத்
தவ்வியே வருவாராயின் சராசரம் எலாம் புரக்கும்
கவ்வுடைச் சூரசண்டன் கைஅயில் காக்க காக்க. 12

கடுவிடப் பாந்தள் சிங்கம் கரடி நாய் புலி மாயானை
கொடிய கோள்நாய் குரங்கு கோலமார்ச்சாலம் சம்பு
நடையுடை எதனாலேனும் நான் இடர்ப்பட்டிடாமல்
சடிதியில் வடிவேல் காக்க சானவி முளைவேல் காக்க. 13

ஙகரமே போல் தழீஇ ஞானவேல் காக்க வன்புள்
சிகரிதேள் நண்டுக்காலி செய்யன் ஏறு ஆலப்பல்லி
நகமுடை ஓந்தி பூரான் நளிவண்டு புலியின் பூச்சி
உகமிசை இவையால் எற்கோர் ஊறிலாது ஐவேல் காக்க. 14

சலத்தில் உய் வன்மீன் ஏறு தண்டுடைத் திருக்கை மற்றும்
நிலத்திலும் சலத்திலும்தான் நெடுந்துயர் தரற்கே உள்ள
குலத்தினால் நான் வருத்தம் கொண்டிடாது அவ்அவ் வேளை
பலத்துடன் இருந்து காக்க பாவகி கூர்வேல் காக்க. 15

ஞமலி அம் பரியன் கைவேல் நவக்கிரகக் கோள் காக்க
சுமவிழி நோய்கள் தந்த சூலை ஆக்கிராண ரோகம்
திமிர்கழல் வாதம் சோகை சிரம் அடி கர்ண ரோகம்
எமை அணுகாமலே பன்னிருபுயன் சயவேல் காக்க. 16

டமருகத்து அடிபோல் நைக்கும் தலைஇடி கண்டமாலை
குமுறு விப்புருதி குன்மம் குடல்வலி ஈழை காசம்
நிமிரொணாது இருத்தும் வெட்டை நீர்ப்பிரமேகம் எல்லாம்
எமை அடையாமலே குன்று எறிந்தவன் கைவேல் காக்க. 17

இணக்கம் இல்லாத பித்த எரிவு மா சுரங்கள் கைகால்
முணக்கவே குறைக்கும் குஷ்டம் மூலவெண்முளை தீமந்தம்
சணத்திலே கொல்லும் சன்னி சாலம் என்று அறையும் இந்தப்
பிணிக்குலம் எனை ஆளாமல் பெரும் சத்தி வடிவேல் காக்க. 18

தவனம் மாரோகம் வாதம் சயித்தியம் அரோசகம் மெய்
சுவறவே செய்யும் மூலச்சூடு இளைப்பு உடற்று விக்கல்
அவதிசெய் பேதி சீழ்நோய் அண்டவாதங்கள் சூலை
எவையும் என்னிடத்து எய்தாமல் எம்பிரான் திணிவேல் காக்க. 19

நமைப்புஉறு கிரந்தி வீக்கம் நணுகிடு பாண்டு சோபம்
அமர்த்திடு கருமை வெண்மை ஆகு பல்தொழுநோய் கக்கல்
இமைக்கும் முன் உறுவலிப்போடு எழுபுடைப் பகந்தர் ஆதி
இமைப்பொழுதேனும் என்னை எய்தாமல் அருள்வேல் காக்க. 20

பல்லது கடித்து மீசை படபட என்றே துடிக்கக்
கல்லினும் வலிய நெஞ்சம் காட்டியே உருட்டி நோக்கி
எல்லினும் கரியமேனி எமபடர்வரினும் என்னை
ஒல்லையில் தாரகாரி ஓம் ஐம் ரீம் வேல் காக்க. 21

மண்ணிலும் மரத்தின் மீதும் மலையிலும் நெருப்பின் மீதும்
தண்நிறை ஜலத்தின் மீதும் சாரிசெய் ஊர்தி மீதும்
விண்ணிலும் பிலத்தின் உள்ளும் வேறு எந்த இடத்தும் என்னை
நண்ணி வந்து அருள் ஆர் சஷ்டிநாதன் வேல் காக்க காக்க. 22

யகரமே போல் சூல் ஏந்தும் நறும்புயன் வேல் முன் காக்க
அகரமே முதலாம் ஈராறு அம்பகன் வேல் பின் காக்க
சகரமோடு ஆறும் ஆனோன் தன்கைவேல் நடுவில் காக்க
சிகரம் மின் தேவ மோலி திகழ்ஐவேல் கீழ்மேல் காக்க. 23

ரஞ்சிதமொழி தேவானை நாயகன் வள்ளி பங்கன்
செஞ்சய வேல் கிழக்கில் திடமுடன் காக்க அங்கி
விஞ்சிடு திசையின் ஞான வீரன்வேல் காக்க தெற்கில்
எஞ்சிடாக் கதிர்காமத்தோன் இகல்உடைக்கரவேல் காக்க. 24

லகரமே போல் காளிங்கன் அல்உடல் நெளிய நின்று
தகர மர்த்தனமே செய்த சங்கு அரி மருகன் கைவேல்
நிகழ் எ ௱ன நிருதி திக்கில் நிலைபெறக் காக்க மேற்கில்
இகல் அயில் காக்க வாயுவினில் குகன் கதிர்வேல் காக்க. 25

வடதிசை தன்னில் ஈசன் மகன் அருள் திருவேல் காக்க
விடைஉடை ஈசன் திக்கில் வேத போதகன் வேல் காக்க
நடக்கையில் இருக்கு ஞான்று நவில்கையில் நிமிர்கையில் கீழ்க்
கிடக்கையில் தூங்கு ஞான்று கிரிதுளைத்துள வேல் காக்க. 26

இழந்து போகாத வாழ்வை ஈயும் முத்தையனார் கைவேல்
வழங்கு நல் ஊண் உண்போதும் மால் விளையாட்டின் போதும்
பழஞ்சுரர் போற்றும் பாதம் பணிந்து நெஞ்சு அடக்கும் போதும்
செழுங் குணத்தோடே காக்க திடமுடன் மயிலும் காக்க. 27

இளமையில் வாலி பத்தில் ஏறிடும் வயோதிகத்தில்
வளர் அறுமுகச் சிவன்தான் வந்து எனைக் காக்க காக்க
ஒளி எழுகாலை முன்எல் ஓம் சிவசாமி காக்க
தெளிநடு பிற்பகற்கால் சிவகுரு நாதன் காக்க. 29

இறகுஉடைக் கோழித் தோகைக்கு இறை முன் இராவில் காக்க
திறல்உடைச் சூர்ப்பகைத்தே திகழ் பின் இராவில் காக்க
நறவுசேர் தாள் சிலம்பன் நடுநிசி தன்னில் காக்க
மறைதொழு குழகன் எம்கோன் மாறாது காக்க காக்க. 29

இனம் எனத் தொண்டரோடும் இணக்கிடும் செட்டி காக்க
தனிமையில் கூட்டம் தன்னில் சரவணபவனார் காக்க
நனி அனுபூதி சொன்ன நாதர்கோன் காக்க இத்தைக்
கனிவோடு சொன்ன தாசன் கடவுள் தான் காக்க வந்தே. 30

## முதல்வன் புராண முடிப்பு
## அந்தாதி
### கலிவிருத்தம் (இசை)

சந்திர சேகரன் தழல் கண்ணே பொறி
வந்தன ஆறு அவை மாசு இல் கங்கை சார்ந்து
ஐந்துடன் ஒன்று அணை குழவி ஆகி ஆறு
அந்தநன் மாதர்கள் அமுதம் உண்டவே. 1

உண்டவை பலபல உருவங் காட்டுபு
பண்டு உமையால் ஒரு படிவமாய் அவள்
கண்டு என அருத்த அமுது உண்டு காமர்செய்
அண்டஒண் கயிலை சென்று ஆடல் செய்யும் ஆல். 2

ஆடலில் வெஞ்சுடர் அசுவம் ஏறியது
ஈடணை அம்புலி இரதம் ஊர்ந்தது
மூடம் இல் இந்திரன் முதலினோர் கரி
சேடண ஊர்ந்தது செம்பொன் சேய் அரோ. 3

செங்கரு டன்புலி சீயம் ஓதிமம்
சங்கு உறழ் ஏறு உழை சரபம் ஆடு இவர்ந்து
எங்கணும் ஏகியது எழில் கொள் எந்நில
மங்கையரும் விழை மகிமைப் பிள்ளையே 4

பிள்ளமை நீத்து ஒரு பெருவ யோதிகம்
உள்ளவ னாய்ச் சுரர் உலகை நன்குசெய்
உள்ளம் ஒடு அங்ஙனம் உலா வினான்வன
நள் இடன் அடைந்து கின்னரம் செய்தான் அவன். 5

செய்யதன் ஓசையில் சேர்வி லங்குபுள்
மெய்யைம றந்தன வேய்ங்குழல் தொனி
ஐயன் எழுப்பினன் அகல் உண் மாதர்கள்
மையல்செய் விரகம் உள் வருந்த நாளுமே. 6

மேல் அடர் அண்டமும் மேய சேயவன்
மால் உடல் வரை இடை வந்து வானவர்
பால் உறு வலிகளைப் பாறச் செய்துதன்
வாலிருந் தைவத வடிவு காட்டினான். 7

காட்டலுஞ் சதமகன் கடவுளே எமை
வாட்டு ஒரு சூரனை மடித்துகா எனக்
கேட்டு அவன் அஞ்சன்மின் கிருபை செய்தும் என்று
ஆட்டு அரன்பால் படை அரசை வாங்கினான். 8

வாங்கிமல் கணத்து ஒடு மகிவந்து ஓதியும்
வீங்குமெய்க் கயமுகன் தனையும் வீட்டுபு
பாங்கு உடைச் சிங்கனும் பானு கோபனும்
நீங்கிடக் கண்டு அவர் நிருபற் கீண்டனன். 9

கீளவை பரிகொடி யாய்க்கி ளர்ந்தன
ஆள்ஒரு வரை அடைந்து அருணையான் புகழ்
வாள் அன கண்ணியை மணந்து விண்புரந்து
தாளெயின் மான்மணந் தான்ச யம்புவே. 10

------------

## சஷ்டிவகுப்பு

## குழிப்பு (சந்தபேதம் - 32)

தந்தன தனதன தானன தானன
தந்தன தனதன தானன தானன
தனதன தனதன தானனா - தன -
தனதன தனதன தானனா

தத்தத் தனதன தத்தத் தனதன
தத்தத் தனதன தத்தத் தனதன
தந்த தனதன தானனா - தன -
தந்த தனதன தானனா

தனத்த தனதன தனத்த தனதன
தனத்த தனதன தனத்த தனதன
தான தானன தானனா - தன -
தான தானன தானனா

தானன தானன தானன தானன
தானன தானன தானன தானன
தத்த தனத்தன தானனா - தன -
தத்த தனத்தன தானனா

தனதன தனன தனந்த தானன
தனதன தனன தனந்த தானன
தனந்த தானன தானனா - தன -
தனந்த தானன தானனா

தானதன தந்தனன தத்தான தானதன
தானதன தந்தனன தத்தான தானதன
தனதன தனதன தத்தனா - தன -
தனதன தனதன தத்தனா

தனனதன தனதத்த தனனந் தனத்தா
தனனதன தனதத்த தனனந் தனத்தா
தனனதனா தானதத்த தானனா - தன -
தனனதனா தானதத்த தானனா

தனனதன தத்தன  தனனதன தாத்தன
தனனதன தத்தன  தனனதன தாத்தன
தாந்தன தனதன தாந்தனா - தன -
தாந்தன தனதன தாந்தனா

தனன தனத்தன தாந்தன தந்தன
தனன தனத்தன தாந்தன தந்தன
தனன தனதன தந்தனா - தன -
தனன தனதன தந்தனா

தான தந்தன தானன தானன
தான தந்தன தானன தானன
தனத்த தனதன தானனா - தன -
தனத்த தனதன தானனா

தாந்த தந்தன தாந்த தந்தன
தாந்த தந்தன தாந்த தந்தன
தனதன தனதன தந்தனா - தன -
தனதன தனதன தந்தனா

தந்தந் தந்தன தந்தந் தனதன
தந்தந் தந்தன தந்தந் தனதன
தனந்த தான தனாதனா - தன -
தனந்த தான தனாதனா

தனன தனதன தனன தனதன
தனன தனதன தனன தனதன
தத்தா தத்தா தானதனா - தன -
தத்தா தத்தா தானதனா

தத்ததன தந்ததன தத்ததன தந்ததன
தத்ததன தந்ததன தத்ததன தந்ததன
தனதன தந்தன தாந்தனா - தன -
தனதன தந்தன தாந்தனா

தன்னன தத்தன தன்னன தத்தன
தன்னன தத்தன தன்னன தத்தன
தானனத் தானன தையனா - தன -
தானனத் தானன தையனா

தனதன தனத்ததன தனதன தனத்ததன
தனதன தனத்ததன தனதன தனத்ததன
தானன தனன தானதனா - தன -
தானன தனன தானதனா

1. அந்தரர் முனிவரர் நாகர்கள் தானவர்
அங்கு எழு மநுடர்கள் நாடு ஒரு வாழ்வு உள
அரன் நுதல் விழி வரு தூயனே - உமை
யவள் முலை அமுது உணும் வாயனே.

2. அத்தித் திருமுக நித்தற்கு இளையவ
அப்புச் சுரநதி நச்சு அற்புத சுத
அண்டர் பதிபணி பாதனே - குண
சந்த்ரன் என வரு நீதனே.

3. அரத்த மலரினும் நயத்த துகிரினும்
அழுக்கு இல் அழலினும் மிகுத்த துவர் ஒளிர்
ஆக ஞான வினோதனே - சிவ
போக போதக நாதனே.

4. ஆசினி ஆர் அறுமீன் மதலாய் தகர்
ஆகிய வாகனம் ஏறிய வானவ
அட்டகுணப் பரமேசனே சிவ -
சித்தர் கணக் கிருபேசனே.

5. அளிபல குடையும் அலங்கலோடு எழில்
அவிழ் மணம் உடைய கடம்புமே புனை
அகன்ற மார்பு உடை ஆதியே - களி
நிறைந்து உளோர் அடை சோதியே.

6. ஆடக நறும்பணி மணிப் பூண் எலாம் மிளிர
வாச நடம்புரி இறைச் சீர் அறாமயிலில்
அனுதினம் அமரும் உன்மத்தனே - அர
னொடு நவில் பிரணவ கத்தனே.

7. அடல் அவுண குலம் முற்றும் அழியும் படிக்கே
அசுரபதி வரை ஒத்த உருவம் கிழித்தே
அவிர் அயிலார் நீள் திருக்கை வீரனே - எனது
அளி அகலாது ஊடு இருக்கும் நீரனே.

8. அணி மதுகை உற்றபல் பறவை அரசாத் திரி
அதி உரம் உடைக் கலுழனை முனி செமாப்பு உயர்
ஆண்டலை அணை கொடி ஆண்டவா - குடை
தோன்றிட அசை ஒரு தாண்டவா.

9. அகிலம் வழுத்து அருள் ஆம் சுரகுஞ்சரி
அரிய கொடிச்சி அவாம்படிவம் திகழ்
அழக முருக அரவிந்தனே - குளிர்
நயன அறுமுக கந்தனே.

10. ஆழி சங்க நிலாவு கை மாயனும்
ஆதரம் செறி பாரதி நேயனும்
அருக்கன் ஒளி அன மேனியே - உள
உருத்திரனு நினை ஞானியே.

11. ஆம் பரம்பர ஓம் சிதம்பர
ஆன்ற துங்க மன அம்புயம் தனில்
அமர் குக சரவண சம்புவே - சுப
மழை தரும் அருள் எனும் அம்புவே.

12. அஞ்சு அஞ்சும்படி உந்தும் பெரியவர்
அண்டும் செந்திரு நின்று இன்பு உதவிடும்
அனந்த வேத விலாசனே - நனி
சிறந்த யோக உலாசனே.

13. அமுதம் விழைநலம் உடைய குறுமுனி
அதிகம் மகிழ்வுற அமுத உரை நவில்
அத்தா முப்போது ஊறுஇலியே - உயர்
சத்தா சித்தா வீறு இலியே.

14. அற்றம் அறு கந்தகிரியைக் கருது சிந்தையர்
அகத்துணி தடிந்து அதை அளித்தருள் அன்பு செயும்
அகணித அற்புத சாந்தனே - பர
சிவ நிலையைத் தரு சேந்தனே.

15. அன்னையும் அப்பனும் மண்ணுகனிட்டனும்
அண்ணனும் அற்புறு செம்மலும் அத்தனும்
ஆறு எழுத்தான் என உள்ளியே - பல
நூறு எழுத்து ஆர் கவி சொல்லியே.

16. அலையும் என் நினைப்பில் உள குருபர தமிழ்க் கலைஞர்
அவைஇடை மணித்தவிசில் வதி ஒரு திருப்புலவ
ஆர்வொடு பொருநர் சூழ்பரனே - முடி
நாடகம் அது செய் மாசுரனே.

17. சுந்தரம் உறுகுறள் நேரிசை காசு அறு
சிந்தியல் பலதொடை நாலடி கீர் அணை
தொகல் அறு சவலைகளே கெடா - முதல்
உறுகவி அகவலின் நேர்மை சேர்.

18. சுத்தத் தொடர்பும் இரட்டைக் குறள் இசை
துற்றத் தெகுள்கவி அற்றற்று அமைவது
துண்டுபடு கலி நாலிலே - இயை
சந்தம் உள கலி நூலிலே.

19. தொடுக்கவரு தரவுகொச்சம் அடிகள்
சுருக்கம் அற வரும் இயல்தர விணைசி
லேஓர் தாழிசை தோல்கள் ஆர் - பல
வே ஒர் தாழிசை மீறியே.

20. சோர்வும் உறு ஓர் கலி நேரிசை சேர்கலி
தூய சுவேதமது ஆர் கலி சீறடி
துப்பு அலை ஒத்து உறு பாவரோ - நல
கட்டளை பெற்ற ஓர் பாஅரோ.

21. தொனி மலி குறள்அடி வஞ்சி சீர்மிகு
தொடை அடி உள ஒரு வஞ்சியே மருள்
தொடர்ந்த பா இரு பாதமே - உள
குறைந்த தாழிசை நாதமே.

22. தூஉடன் இயங்கும் ஒரு முத்தாள தாழிசைகள்
ஈர் அடி கொள் செந்துறைகண் முப்பாதம் ஆர் துறைகள்
துரிசுஇல் இரிபத விருத்தமே - சதுர்
அடிஉடைய வெளி விருத்தமே.

23. துறும் அகவல் அளவு ஒத்து நிகழும் சதுர்ச்சீர்
சிவணி இடும் ஒரு முப்பதம் உறும் சிறப்புஆர்
தொடை உடை ஓர் தாழிசைச் சொல் ஏறுபா - அக
வல் அது இழியா நீள்துறைச் சொல் ஆர்வு அதே

24. தொடைஒலி மிகுத்து எழு நெடில் அடியின் மேற்படும்
அகவலின் விருத்தமும் இருபதம் அறாத்தளை
தோன்று ஒரு திரிபதம் நான்கும்ஆ - முடிவு
ஆம்பதம் மிகுகலி சேர்ந்தசீர்.

25. துதையும் இழிப்பு இசை நான்கு அடி ஐந்து சீர்
உடைய நிலைத்துறை மேன் கணிதம் பெறு
துறைகள் அளவு அடி நன்குமே - உரை
பலவும் உறுகலி அந்தமே.

26. தோல் முழங்கு இரு சீர் அடி நாலினே
மூவிதம் கிளர் ஓர் பொருள் மீதில் நேர்
சுரக்கும் இயல்பு உடை ஏசிலா - நறி
யவச்சி இசை இரு சீரினே.

27. தோம் களங்கம் இல் நான்கு அரும்பதம்
ஓங்கு வஞ்சியை ஏய்ந்திடும் துறை
துகள் அறு துழனிகொள் சிந்துசேர் - சதுர்
அடியுடை இறுதியும் இன்சொலே.

28. துன்றும் சந்தம் நெடும் சொல் கவி சது
ரங்கம் பொங்கு அகிபந்தத் திகிரிகள்
சுருங்கு பாநல ஏகபா - தமும்
மிகுந்த பா எழுகூறு சீர்.

29. சுலவு சுழிகுளம் முரசு இரதகவி
சுடரும் மயில் அயில் வினவல் விடைபிறி
துப்பா நற்கால் மாறுதலே - கர
வுப்பா ஒற்று ஏறாததுமா

30. சொற்சுவை கொள் பங்கிள் சதுர்த்தம் ஓர் தரம் படுவி
கற்பநடை பங்கயம் இனச்செயுள்கள் கொம்புஇலது
சுக இதழ் அற்றது கூம்புபா - முரண்
உறு பசுமுத்திரம் நோன்புஒடே

31. சொன்னவர் மெச்சிட மின்னு திருப்புகழ்
பன்னியவற்கு அருள் இன் அமுதக் கடல்
தோல் மறைப் பூ உறை செல்வமா - மரு
கா விருப்பால் எனது உள்உளே.

32. தொடர்வெருவு அறப்பெரிய அருள்புரி நினைப்பொடு
மறதியும் விளைக்கு இருமல மதம் அறக்களை
சூர்தபு நினது சேண் அருளே - உறவு
ஆகிட அருள் செயாய் இனியே.

33. மந்திர விதிவழி பால் தயிர் நீடுக
ரும்பு இடை வரு தெளி சாறு இள நீர்நறு
மணம் உள உதகம் எலாம் ஒரே - மனது
ஓடு நல திரு அபிடேகமே

34. மத்துப் பிரசமும் இட்டக் கனிகளும்
ஒட்பச் சுரபதி சிட்டிப்பவன் அரி
வஞ்சம் அறு சிவ னார் எலாம் - அணி
ஒண்பொடி என அபிடேகமே.

35. வழுக்கள் அறமிக இழைத்து உரிய உடை
உடுத்து நவைஅற முறுக்கிய கனக
மார்புநூல் இடலே செயா - விரை
நாறு தேய்வைகளே இடா

36. மாலதி கூவிளம் நீபம் அசோகுக

லாரம் இராசிவம் ஆதி நறாமலர்

வைத்த புதுத்தொடையே இடா – அரி

அட்சதையில் சில தூவியே

37. மருமலி புகைகள் எழும்பவே பணி

எரிசுடர் பலவும் இலங்கவே பணி

வளர்ந்த வாழை பலாவிளா – உதிர்

குளஞ்சி மாதுளை கோளியே

38. மா இனிய முந்திரி புளிப்பே இலாவதரி

ஆசினிகள் கனி குவித்தே எளோடு பொரி

வடை அதிரசம் இடி அப்பமோ – தகம்

அகல் இலை அடை அவல் பிட்டுமா

39. மதுர ரசம் மருஉற்ற புனலின் தயிர்க்கூழ்

கடலை பல பயறு உப்பொடு அறுநன் சுவைச்சீர்

மலிய நிலாவே நிகர்த்த பாகலே – உயர்

எகினம் எலீ போல் இருக்கும் ஓசையே

40. வரி அவரை கத்தரி துவரைபுடல் பூச்சுணை

கொடி வெளரி கக்கரி இவைகளது காய்த்திரள்

வான்படர் முனைவரும் வேண்டுளர் – சுவை

தேங்கிய பலமும் வாங்கியே

41. மலர நறுக்குபு மூண்டுளரி அங்கியில்

உரிய குணப்பதம் வீங்க அயர்ந்து இறை

வதியில் எழுசிறு செம்புநா – ல் இலை

உளது பசலை பொன் ஒன்றும்ஓர்

42. வாடல் நந்திய கீரை கொய் கீரைசில்

கீரை தண்டுஉறு கீரைகள் யாவையும்

வதக்கி நயன்உற மூடியே – இலை

இருத்தி நறுவயல் ஊரிலே

43. வாய்ந்த தண்புனல் பாய்ந்த பைம்பயிர்
ஈன்ற இன்சுவை ஆர்ந்த செஞ்சிறு
மணிமிளகு விலை உயர்ந்தசீ – ரக
அரிசி அடிசில் பணி அன்புஇலா

44. வண்டன் சண்டன் இடம்பன் கொலையினன்
வம்பன் துன்பினன் எங்கும் திரிபவன்
மறங்கொள் ஈனர்கள் காணொணா – வணம்
வளைந்த சீரைஉளே எலாம்

45. வரிசை நிரல் நிறை இசையும் அழகு அது
பெருகி அமர்வுஉற வடுஇல் சுசிஉடன்
வைத்தே நட்புஆம் மேல் மனதோ டுப
டைத்தே நல்பாகே இலையே

46. வட்டகையில் நன்கு அமைய வைத்து அமல கந்தமலர்
அர்ச்சனை புரிந்து பிரசித்த சிவகொன் தலையில்
வகுளம் முடித்த சுரேந்திரா – அடி
யவர்கள் பழிச்சு புராந்தகா

47. வன்னியும் மத்தமும் வெண்மை அருக்கமும்
மன்னு புயச்சிவன் நண்ணும் ஒருத்திகை
மாமணித் தீபகம் வல்லியே – விழி
ஆயிரக் கோபதி செல்வியே

48. வதுவை செய் அருள்குமர மறைபுகழ் பரப்பிரம
எனநனி துதித்து எம்இடர்அற அருள்எனப் பணியும
மாதவர் தலைவனே நயனே – படர்
பாளிதம் அணி அனாமயனே.

49. இந்திரன் அலர் அயன் மாதவன் ஆதவன்
அந்தகன் அறல்இறை ஈசன் நிசாபதி
எரிஇறை அளகையன் வாயுவீ – டுஉள
நிருதி அறிவுஅறவர் பூதரே

50. இட்டக் கருடர்கள் சித்துப் புருடர்கள்
செச்சைக் கினரர் அருத்தப் பணிமிலை
இஞ்சை உடைய பிசாசர் வே - ணியர்
விஞ்சையினர் இசை பாடுவோர்

51. இயக்க இவர்பலர் விதித்த பணிசெய
உடுக்கை திமிலைகள் பெருத்த பதலைகள்
ஓதுஇலா குளி பேரி மா - முர
சு ஓடு தூரிய மாமுழா

52. வேண்உடை ஆனகம் வான்இடி போல் இரை
யேதர ஊது பல்கோடுகள் காகளம்
மிக்கு மணிக்குழல் ஏழுகோல் - உள
பொன்கலம் எல்கிணி கோடியே

53. இமிர் ஒலி இசைகள் தனந்த தானன
தனதன தனன தனந்த னா எனும்
இயல்பலே தர வான் அளாம் - உரு
விலங்கி யானைகள் கோடியே

54. ஏசறு பெருங்கிரிகளைத் தாவு தூசி முது
கானது வளைந்து இரவணப்பேர் உலாம் மிருகம்
எழுசதம் எழுதரம் மிக்கதீ - பிகை
முழுமதி நிகர்குடை பிச்சமே

55. இணை சிவிறி விரிவட்டம் எணும் நெஞ்சரைத்தான்
வருகஎன அசை பொன்கை புரையும் கொடித்தேர்
இரிதல் இலா வார்கழைக்கண் ஏறுநீள் - கொடி
சுழல் அருகா ஏழ் இலக்கம் ஆகவே

56. இருபுறம் நடக்க ஓர் பெரியதுச நாட்டிய
விரதமிசை ஒப்புஅறு பவளமலை போற்படை
ஏந்துபு வருபெரு வேந்தனே - கிரி
சாய்ந்திட அயில் எறி காந்தனே

57. இகலுந ருக்கு எமனாம் தனி மந்திர
இனியவருக்கு இனிதாம் குண பஞ்சர
இமையர் களிகொள வென்று உளே – எணி
அவர்கள் புரிதரு மங்களா

58. ஏம பந்தன பூடண சேமனே
நாகர் சிந்தையிலே உள வீமனே
இடுக்கண் அறு தவராஜனே – மறை
முடிக்கு உள்உள பரதேஜனே

59. ஏங்குஎன் நெஞ்சினை ஆய்ந்திடும் தயை
சான்ற சம்ப்ரம பூஞ் சதங்கைகள்
இலகிடு பதபர மண்டலா – பகல்
அனைய கனமகர குண்டலா

60. எங்கும் தங்கு விசும்பும் சிறிது என
மிஞ்சுஒண் பண்பொடு நின்று எங்குநிகழும்
இரண்டில் ஏக அனாதியே – கறை
சிறந்த சாதமண் ஆதியே

61. இடர் இல் கலமுனி உரிய சுகமுனி
அரைய முசுமுகன் நறிய பசுமுகன்
இப்பார் மெச்சு ஓர் கீரனும் மே – ல் நசை
உற்று ஓய்வு அற்றே சூழ்குரவா

62. எட்டுமலையும் தகர எற்றி மலர் அங்கைகளில்
அட்டகரி பந்துஎன எடுத்த விறல் பம்பு இளைஞு
இரணிய வெற்பு எனும் மாண்புசால் – பொறை
அதனை அசைத்து அதில் ஏய்ந்தகோடு

63. என்னும் முகட்டினை விண்ணில் இறைத்தகை
மன்னவ ஐப்பசி மன்னிடு சட்டியிலே
புசிப்பார் திருவுள்ளமே – எனை
ஆதரித்து ஆள் அருள் வெள்ளமே

64. எவையும் அறிசித்துஉருவ மகுட முடி உற்றவர்கள்
தொழுசடை முடித்திருவர் புரவல குணத்திரய
வேதம் இல் பெயர்கள் ஆயிரமே - உள
பாவகி துரிய பராபரமே.

## நவவீரர் நவரத்தினக்கலிவிருத்தம்

### வீரவாகு தேவர் - மாணிக்கம்

சீர் அறா முருகவேள் உறை செழுமை
ஆர அறா நிலய வாரியில் அமர் ஏண்
நார் அறா உழுவல் ஏறிடு நலிவு இல்
வீரவாகு எனும் வீரனை விழைவாம். 1

### வீரகேசரிதேவர் - தரளம்

என்னை ஆள் இறையாய் உலகு எங்கணும்
மன்னு கந்தபிரான் மந்திரத்து இடை
மின்னு வாழ்க்கை அறா வீரகேசரி
தன்னை உள் அன்பில் தாழ்வர்க்கு இன்று ஊழலே. 2

### வீரமகேந்திரதேவர் - புட்பராகம்

ஓதரும் வீரமகேநதிரன் ஒருவன்
பாதம் உளே படர் மாந்தர பரம்ஈ
ஆதரம் வீய மதாந்தரம் கருதும்
சூத மகா மரம் ஈர்ந்த தோமர வேள். 3

### வீரமகேசதேவர் - கோமேதகம்

அரணத்து இறையோனை அனாரதம் மேல்
கரணத்து எணுவார் கவல் நூறிடுவான்
முரணில் பொரு சூரனொடே முனைவோன்
சரணச் சுக வீர மகேசன் அரோ. 4

## வீரபுரந்தர தேவர் - வைடூரியம்

திகை எலாம் நீக்கம் இலாது செறிந்த பெரும்
தகை எலாம் ஏற்று அவிர் சாமி பதம் பரவாப்
பகை எலாம் நீக்கு ஒரு பாடு பிறந்து உளுவார்
மிகை எலாம் வீட்டிடும் வீரபுரந்தரனே 5

## வீரராக்கததேவர் - வைரம்

வீவு அயனம் இலா மேல் வீட்டு நெறியை நேடும்
ஆவல் அறவர் வாழ்வான் ஆட்டு முருக வேளின்
தாவில் அருள்கொள் வீரராக்க தன் அடி தாழ்வார்
தேவரும் அறியா ஓர் சீர்த்தியில் உயர்வார் ஆல். 6

## வீரமார்த்தாண்டதேவர் - மரகதம்

தாமதம் எற்றிடு மாசு இல் சார்ச் சேந்தன்
சேம அடிக்களி யாம்ஓர் சீர்ச் சார்ந்தோர்
மாமிடல் மிக்குஉடை வீர மர்த்தாண்டன்
பூமனநச்சுநர் போதம் போய்க் காண்பார். 7

## வீராந்தகதேவர் - பவளம்

மள்ளல் ஏறு ஏண் சிகி இவரும் மஞ்சனை
உள்ளுவோர் ஓங்கு அவன் உணர்வு சந்ததம்
கொள்ளு வீராந்தகன் நினைவு கொண்டிடின்
தள்ளுவார் காண்கணத் தறுகண் யாவையும் 8

## வீரதீரதேவர் - நீலம்

ஆர் எப்படி முனினும் அதுபோலத் திருவருள் கூர்
நாரப் பெருமானாய் அழநாகப் பெயரான் ஆள்
தாரப் பொருள் வேலன்பணி தகைமைக் குணவீர
தீரப் பெயரோனைப் புகழ் தெருளர்க்கு இலை சிறுகே 9

## பரிபூஜன பஞ்சாமிர்த வண்ணம்

### 1. பால்

தனந்த தந்தன தனந்தனா
தனந்த தந்தன தனந்தனா
தனந்த தந்தன தனந்தனா
தனந்த தந்தன தனந்தனா

தந்தந் தந்தன தந்தானா
தந்தந் தந்தன தந்தானா
தந்தந் தந்தன தந்தானா
தந்தந் தந்தன தந்தானா

தாந்த தந்தன தன தாந்த தந்தனனா
தாந்த தந்தனனா தன தாந்த தந்தனனா

தனந்த தந்தன தனந்த தந்தன
தனந்த தந்தன தனந்தனா
தனந்த தந்தன தனந்த தந்தன
தனந்த தந்தன தனந்தனா - தனதனதன்தானா.

இலக்கு நன்கலை விரிஞ்சனோ
டனந்த னுஞ்சத மகன்சதா
வியன்கொ டம்பியர் களும்பொனா
டுறைந்த புங்கவர் களுங்கெடா

தென்றுங் கொன்றைய ணிந்தோனார்
தந்தண் டின்றிர ளுஞ்சேயா
மென்றன் சொந்தமி னுந்தீதே
தென்றங் கங்கணி கண்டோயா

தேந்து வன்படைவேல் வலி சேர்ந்த திண்புயமே
யேய்ந்த கண்டகர்கா றொடை மூஞ்சி கந்தரமோ

டெலும்பு றுந்தலை களுந்து ணிந்திட
வடர்ந்த சண்டைக டொடர்ந்துபே
யெனுங்கு ணுங்குக ணிணங்க ளுண்டரன்
மகன்பு றஞ்சய மெனுஞ்சொலே
- களமிசையெழுமாறே, (1/4)

துலங்கு மஞ்சிறை யலங்கவே
விளங்க வந்தவொர் சிகண்டியே
துணிந்தி ருந்துயர் கரங்கண்மா
வரங்கண் மிஞ்சிய விரும்புகூர்

துன்றுந் தண்டமொ டம்பீர்வாள்
கொண்டண் டங்களி னின்றூடே
கண்டும் புங்கம ழிந்தேலா
தஞ்சும் பண்டசு ரண்சூதே
சூழ்ந்தெ ழும்பொழுதே கரம் வாங்க யொண்டிணிவே
றூண்டி நின்றவனே கிளை யோங்க நின்றுளமா

துவந்து வம்பட வகிர்ந்து வென்றதி
பலம்பொ ருந்திய நிரஞ்சனா
சுகங்கொ ளுந்தவர் வணங்கு மிங்கித
முகுந்த சுந்தர வலங்கிருதா
-அரிபிரமருமேயோ, (1/2)
அலைந்து சந்தத மறிந்திடா
தெழுந்த செந்தழ லுடம்பினா
ரடங்கி யங்கமு மிறைஞ்சியே
புகழ்ந்த வன்றுமெய். மொழிந்தவா

அங்கிங் கென்பத றுந்தேவா
யெங்குந் துன்றிநி றைந்தோனே
யண்டுந் தொண்டர்வ ருந்தாமே
யின்பந் தந்தரு ளுந்தாளா

ஆம்பி தந்திடுமா மணி பூண்ட வந்தளையா
வாண்ட வன்குமரா வெனை யாண்ட செஞ்சரணா

அலர்ந்த விந்துள வலங்க லுங்கடி
செறிந்த சந்தன சுகந்தமே
யணிந்து குன்றவர் நலம்பொ ருந்திட
வளர்ந்த பந்தனை யெனும்பெணாள்
- தனையணைமணவாளா. (3/4)

குலுங்கி ரண்டுமு கையுங்களா
ரிருண்ட கொந்தள வொழுங்கும்வேல்
குரங்கு மம்பக மதுஞ்செவா
யதுஞ்ச மைந்துள மடந்தைமார்

கொஞ்சும் புன்றொழி லுங்காலோ
ருஞ்சண் டன்செய லுஞ்சூடே
கொண்டங் கம்பட ருஞ்சீழ்நோ
யண்டந் தந்தம்வி மும்பாழ்நோய்

கூன்செ யும்பிணிகால் கரம் வீங்க முங்கலும்வாய்
கூம்ப ணங்குகணோய் துயர் சார்ந்த புன்கணுமே

குயின்கொ ளுங்கடல் வளைந்த விங்கெனை
யடைந்தி டும்படி யினுஞ்செயேல்
குவிந்து நெஞ்சமு எணைந்து நின்பத
நினைந்து யும்படி மனஞ்செயே
- திருவருண்முருகோனே. (1)

## 2. தயிர்

தனத்தன தந்தன தனத்தன தந்தன
தனத்தன தந்தன தனத்தன தந்தன
தா தனனா தனனா தனனா

தனந்த தந்தன தனந்த தந்தன
தனந்த தந்தன தனந்த தந்தன
தா தனனா தனனா தனனா - தனதனதனதானா.

கடித்துண ரொன்றிய முகிற்குழ லுங்குளிர்
கலைப்பிறை யென்றிடு நுதற்றில கந்திகழ்
கா சுமையா ளிளமா மகனே
களங்க விந்துவை முனிந்து நன்கது
கடந்து விஞ்சிய முகஞ்சி றந்தொளி
கா லயிலார் விழிமா மருகா
- விரைசெறியணிமார்பா (1/8)

கனத்துயர் குன்றையு மிணைத்துள கும்பக
லசத்தையும் விஞ்சிய தனத்திசை மங்கைகொள்
கா தலனான் முகனா டமுதே
கமழ்ந்த குங்கும நரந்த முந்திமிர்
கரும்பெ னுஞ்சொலை யியம்பு குஞ்சரி
கா வலனே குகனே பரனே
- அமரர் கடொழுபாதா (1/4)

உடுக்கிடை யின்பணி யடுக்குடை யுங்கன
யுரைப்புயர் மஞ்சுறு பதக்கமொ டம்பத
வோ வியநூ புரமோ திரமே
ருயர்ந்த தண்டொடை களுங்க ரங்களி
லூறும்ப சுந்தொடி களுங்கு யங்களி
லூ ரெழில்வா ரொடுநா சியிலே
- மினுமணிநகையோடே, (3/8)

உலப்பறி லம்பக மினுக்கிய செந்திரு
வுருப்பணியும்பல தரித்தடர் பைந்தினை
யோ வலிலா வரணே செயுமா
றொழுங்கு றும்புன மிருந்து மஞ்சுல
முறைந்த கிஞ்சுக நறுஞ்சொ லென்றிட
வோ லமதே யிடுகா னவர்மா
- மகளெனுமொருமானாம், (1/2)

மடக்கொடி முன்றலை விருப்புடன் வந்ததி
வனத்துறை குன்றவ ருறுப்பொடு நின்றிள
மா னினியே கனியே யினிநீ

வருந்து மென்றனை யணைந்து சந்தத
மனங்கு ளிர்ந்திட விணங்கி வந்தரு
ளாய் மயிலே குயிலே யெழிலே
- மடவனநினதேரார், (5/8)

மடிக்கொரு வந்தன மடிக்கொரு வந்தனம்
வளைக்கொரு வந்தனம் விழிக்கொரு வந்தனம்
வா வெனுமோர் மொழியே சொலுநீ

மணங்கி ளர்ந்தந லுடம்பி லங்கிடு
மதங்கி யின்றுள மகிழ்ந்தி டும்படி
மான் மகளே யெனையா ணிதியே
- எனுமொழிபலநூறே, (3/4)

படித்தவ டன்கைகள் பிடித்துமு னஞ்சொன
படிக்கும ணந்தரு ளளித்தவ னந்தகிர்
பா கரனே வரனே யரனே

படர்ந்த செந்தமிழ் தினஞ்சொ லின்பொடு
பதங்கு ரங்குந ருளந்தெ ளிந்தருள்
பா வகியே சிகியூ ரிறையே
- திருமலிசமரூரா, (7/8)

பவக்கட லென்பது கடக்கவு நின்றுணை
பலித்திட வும்பிழை செறுத்திட வுங்கவி
பா டவுநீ நடமா டவுமே

படர்ந்து தண்டயை நிதஞ்செ யும்படி
பணிந்த வென்றனை நினைந்து வந்தருள்
பா லனனே யெனையாள் சிவனே
- வளரயின்முருகோனே. (1)

### 3. நெய்

தந்தந்தா தந்தந்தா தந்தந் தந்தன தந்தந்தா
தந்தந்தா தந்தந்தா தந்தந் தந்தன தந்தந்தா
தாந் தனா தனா தனா தனா

தன தன தத்தத் தனதன தத்தத்
தனதன தத்தத் தனதன தத்தத்தா

தனதன தத்தத் தனத்தனா
தன தன தத்தத் தனத்தனா
தனதன தத்தத் தனத்தனா
தனதன தத்தத் தனத்தனா

தனனா தனனா தனனா தனனா
தனனா தனனா தனனா தனனா
தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன தனதன தனதன - தந்தன தனதானா

வஞ்சஞ்சூ தொன்றும்பேர் துன்பஞ் சங்கட மண்டும்பேர்
மங்கும்பேய் நம்பும்பேர் துஞ்சும் புன்சொல்வ ழங்கும்பேர்
மான் கணார் பெணார் தமா லினான்

மதியது கெட்டுத் திரிபவர் தித்திப்
பெனமது துய்த்துச் சுழல்பவ ரிச்சித்தே

மனமுயி ருட்கச் சிதைத்துமே
நுகர்தின துக்கக் குணத்தினோர்
வசையுறு துட்டச் சினத்தினோர்
மடிசொல மெத்தச் சுறுக்குளோர்

வலியே றியகூ ரமுளோ ருதவார்
நடுவே துமிலா ரிழிவார் களவோர்

மணமல ரடியிணை விடுபவர் தமையினு
நணுகிட வெனைவிடு வதுசரி யிலையே
- தொண்டர்கள்பதிசேராய், (1/4)

விஞ்சுங்கார் நஞ்சுந்தா னுண்டுந் திங்கள ணிந்துங்கால்
வெம்பும்போ தொண்செந்தாள் கொண்டஞ் சஞ்சவு தைந்தும்பூ
மீன் பதா கையோன் மெய்வீ யுமா

விழியைவி ழித்துக் கடுகவெ ரித்துக்
கரியையு ரித்துத் தனுமிசை சுற்றிக்கோள்

விழைவறு சுத்தத் சிறப்பினார்
பிணைமழு சத்திக் கரத்தினார்
விஜயவு டுக்கைப் பிடித்துளார்
புரமதெ ரிக்கச் சிரித்துளார்

விதிமா தவனா ரறியா வடிவோ
ரொருபா திபெணா யொளிர்வோர் சுசிநீள்

விடைதனி லிவர்பவர் பணபண மணிபவர்
கனைகழ லொலிதர நடமிடு பவர்சேய்
**- என்றுளகுருநாதா, (1/2)**

தஞ்சஞ்சேர் சொந்தஞ்சா லஞ்செம் பங்கய மஞ்சுங்கா
றந்தந்தா தந்தந்தா தந்தந் தந்தன தந்தந்தா
தாந் ததீ ததீ ததீ ததீ

ததிமிதி தத்தித் தரிகிட தத்தத்
திரிகிட தத்தத் தெயெனந டிக்கச்சூழ்

தனிநட னக்ருத் தியத்தினாண்
மகிடனை வெட்டிச் சிதைத்துளான்
தடமிகு முக்கட் கயத்தினாள்
சுரதனு வக்கப் பகுத்துளாள்

சமிகூ விளமோ டறுகா ரணிவா
ளொருகோ டுடையோ னனையாய் வருவாள்

சதுமறை களும்வழி படவளர் பவண்மலை
மகளென வொருபெய ருடையவள் சுதனே
**- அண்டர்கடொழுதேவா (3/4)**

பிஞ்சஞ்சூழ் மஞ்சொண்சே யுஞ்சந் தங்கொள்ப தங்கங்கூர்
பிம்பம்போ லங்கஞ்சா ருங்கண் கண்களி லங்குஞ்சீ
ரோங் கவே யுலா வுகால் விணோர்

பிரமனொ டெட்டுக் குலகிரி திக்குக்
கரியொடு துத்திப் படவுர வுட்கப்பார்

பிளிற நடத்திக் களித்தவா
கிரிகெட வெக்கித் துளைத்தவா
பிரியக மெத்தத் தரித்தவா
தமியனை நச்சிச் சுளித்தவா

பிணமா முனமே யருள்வா யருள்வாய்
துனியா வையுநீ கடியாய் கடியாய்
பிசியொடு பலபிழை பொறுபொறு பொறுபொறு
சததமு மறைவறு திருவடி தரவா
**- என்களிமுருகோனே (1)**

தான தந்தன தான தந்தன
தான தந்தன தான தந்தன
தான தந்தன தான தந்தன
தான தந்தன தான தந்தன

தத்தன தனதன தனத்தனா
தனந்த தத்தன தனத்தனா
தத்தன தனதன தனத்தனா
தனந்த தத்தன தனத்தனா - தனதனதனதானா

மாத முந்தினம் வார முந்திதி
யோக மும்பல நாள்க ளும்படர்
மாதி ரந்திரி கோள்க ளுங்கழல்
பேணு மன்பர்கள் பான லந்தர

வற்சல மதுசெயு மருட்குணா
சிறந்த விற்பன ரகக்கணா
மற்புய வசுரரை யொழித்தவா
வனந்த சித்துரு வெடுத்தவா

மால யன்சுரர் கோனு மும்பரெ
லாரும் வந்தன மேபு ரிந்திடு
வான வன்சுடர் வேல வன்குரு
ஞான கந்தபி ரானெ னும்படி

மத்தக மிசைமுடி தரித்தவா
குளிர்ந்த கத்திகை பரித்தவா
மட்டறு மிகலயில் பிடித்தவா
சிவந்த வக்கினி நுதற்கணா
- சிவகுருவெனுநாதா, (1/4)

நாத விங்கித வேத மும்பல்பு

ராண முங்கலை யாக மங்களு

நாத னுன்றனி வாயில் வந்தன

வேயெ னுந்துணி பேய றிந்தபி

னச்சுவ திவணெது கணித்தையோ

செறிந்த ஷட்பகை கெடுத்துமே

னட்புடை யருளமிழ் துணிற்சதா

சிறந்த துத்தியை யளிக்குமே

நாளு மின்புயர் தேனி னுஞ்சுவை

யீயும் விண்டல மேவ ருஞ்சுரர்

நாடி யுண்டிடு போஜ னந்தனி

லேயும் விஞ்சிடு மேக ரும்பொடு

நட்டமின் முப்பழ முவர்க்குமே

விளைந்த சர்க்கரை கசக்குமே

நற்சுசி முற்றிய பயத்தொடே

கலந்த புத்தமு தினிக்குமோ

- **அதையினியருளாயோ, (1/2)**

பூத லந்தனி லேயு நன்குடை

மீத லந்தனி லேயும் வண்டறு

பூம லர்ந்தவு னாத வம்பத

நேய மென்பது வேதி னந்திகழ்

பொற்புறு மழகது கொடுக்குமே

யுயர்ந்த மெய்ப்பெயர் புணர்த்துமே

பொய்த்திட வினைகள யறுக்குமே

மிகுந்த சித்திகள் பெருக்குமே

பூர ணந்தரு மேநி ரம்பெழி

லாத னந்தரு மேய ணிந்திடு

பூட ணந்தரு மேயி கந்தனில்

வாழ்வ துந்தரு மேயு டம்பொடு

பொக்கறு புகழினை யளிக்குமே
பிறந்து செத்திட றொலைக்குமே
புத்தியி லறிவினை விளக்குமே
நிறைந்த முத்தியு மிசைக்குமே
- இதைநிதமுதவாயோ, (3/4)

சீத ளஞ்சொரி கோதில் பங்கய
மேம லர்ந்திடு வாவி தங்கிய
சீர டர்ந்தவ ராவி னன்குடி
யேர கம்பர பூத ரஞ்சிவ

சித்தரு முனிவரும் வசித்தசோ
லையுந்தி ரைக்கட லடிக்கும்வாய்
செற்கண முலவிடு பொருப்பெலா
மிருந்த ளித்தரு ளயிற்கையா

தேனு றைந்திடு கான கந்தனின்
மானி ளஞ்சுதை யாலி ருஞ்சரை
சேரு டம்புத ளாட வந்தசன்
யாக சுந்தர ரூப வம்பர

சிற்பர வெளிதனி னடிக்குமா
வகண்ட தத்துவ பரத்துவா
செப்பரும் ரகசிய நிலைக்குளே
விளங்கு தற்பர திரித்துவா
- திருவளர்முருகோனே. (1)

## 5. தேன்

தானதன தானான் தானதன தானதன
தனதான தனதான தனதான தனதான - தனதன தனதானா

சூலதர னாராட வோதிமக ளாடநனி
தொழுபூத கணமாட வரியாட வயனோடு
தூயகலை மாதாட மானளினி யாடவுயர்
சுரரோடு சுரலோக பதியாட வெலியேறு

சூகைமுக னாராட மூரிமுக னாடவொரு
தொடர்ஞாளி மிசையூரு மழவாட வசுவீர
சூலிபதி தானாட நீலநம னாடநிறை
சுசிநார விறையாட வலிசானி ருதியாட
- அரிகரமகனோடே (1/4)

காலிலியு மேயாட வாழ்நிதிய னாடமிகு
கனஞால மகளாட வரவேணி சசிதேவி
காமமத வேளாட மாமரைதி யாடவிர்
கதிராட மதியாட மணிநாக வரசேகை
காணுமுனி வோராட மாணறமி னாடவிரு
கழலாட வழகாய தளையாட மணிமாசில்
கானமயி றானாட ஞானவயி லாடவொளிர்
கரவாள மதுவாட வெறிசூல மழுவாட
-வயிரமலெறுழோடே (1/2)

கோலவரை ஞாணாட நூன்மரும மாடவிரை
கொளுநீப வணியாட வுடையாட வடனீடு
கோழியய ராதாட வாகுவணி யாடமிளிர்
குழையாட வளையாட வுபயாறு கரமேசில்
கோகநாத மாராறொ டாறுவிழி யாடமலர்
குழகாய விதழாட வொளிராறு சிரமோடு
கூறுகலை நாவாட மூரலொளி யாடவலர்
குவடேறு புயமாட மிடறாட மடியாட
- அகன்முதுகுரமோடே (3/4)

..லுமறை யேயாட மேனுதல்க ளாடவிய
னலியாத வெழிலாட வழியாத குணமாட
நாகரிக மேமேவு வேடர்மக ளாடவரு
ணயவானை மகளாட முசுவான முகனாட
நாரதம கானாட வோசைமுனி யாடவிற
னவவீரர் புதராட வொருகாவ டியனாட
ஞானவடி யாராட மாணவர்க ளாடவிதை
நவிறாச னுடனாட விதுவேளை யெணிவாகொள்
- அருண்மலிமுருகோனே (1)

## அத்தியாச்சிரம சுத்தாத்துவித வைதிக
## சைவசித்தாந்த ஞானபானு பாம்பன்
## ஸ்ரீமத் குமார குருதாச சுவாமிகள் ஸ்தவம்

1. ஓம் குருதேவ பதயே நமோ நம:
2. ஓம் குரு கருணாகர பதயே நமோ நம:
3. ஓம் குரு கர்த்த பதயே நமோ நம:
4. ஓம் பாம்பன் பதிமுளைத்த குரு பதயே நமோ நம:
5. ஓம் திருத்தேவைக் குரு பதயே நமோ நம:
6. ஓம் சைவ சித்தாந்த ஞான குருபதயே நமோ நம:
7. ஓம் தவஞான குரு பதயே நமோ நம:
8. ஓம் தவயோக குரு பதயே நமோ நம:
9. ஓம் சித்தி முத்தி குரு பதயே நமோ நம:
10. ஓம் சக்தியே உருவான குரு பதயே நமோ நம:
11. ஓம் அப்பாவு ஆன குரு பதயே நமோ நம:
12. ஓம் அருள் தரும் குரு பதயே நமோ நம:
13. ஓம் அருணகிரி அருள்பெற்ற குரு பதயே நமோ நம:
14. ஓம் எங்களை காத்தருளும் குரு பதயே நமோ நம:
15. ஓம் அழகனையே இயல் இசையாய்ப் பாடிய குரு பதயே நமோ நம:
16. ஓம் அடியார்க்கு அடியவராய்க் கடம்பனைத் தரிசித்த குரு பதயே நமோ நம:
17. ஓம் ஆறுமுகனின் அருட்பா தந்த குரு பதயே நமோ நம:
18. ஓம் பிறவிப் பயன் அடைய வரம் தரும் குரு பதயே நமோ நம:
19. ஓம் எளியோர்க்கும் கந்தன் அருள் கிடைக்கப் பலபந்தங்கள் தந்த குரு பதயே நமோ நம:
20. ஓம் இணை அற்ற குரு பதயே நமோ நம:
21. ஓம் ஈடு இல்லாப்பரம் பொருளான குரு பதயே நமோ நம:

22. ஓம் மெய்ப்பொருளாய் விளங்கும் குரு பதயே நமோ நம:

23. ஓம் ஊழ்வினை தீர்த்து உன்னத வாழ்வளிக்கும் குரு பதயே நமோ நம:

24. ஓம் எங்களைக் காக்க வந்த குரு பதயே நமோ நம:

25. ஓம் எங்கள் பிதா குமர குரு பதயே நமோ நம:

26. ஓம் எங்கும் நிறைந்த இறையே குரு பதயே நமோ நம:

27. ஓம் எல்லாச் செய்வினைகளையும் தீர்க்கும் குரு பதயே நமோ நம:

28. ஓம் எங்கும் நிறைந்த ஆனந்த ஏகாந்த மூர்த்தி குரு பதயே நமோ நம:

29. ஓம் எங்கள் இதயத்தே நிறைந்த கோவே குரு பதயே நமோ நம:

30. ஓம் எண்ணிய வரம் அருளும் எந்தையே குரு பதயே நமோ நம:

31. ஓம் ஏற்றம் தரும் கொற்றவராம் குரு பதயே நமோ நம:

32. ஓம் ஏக குணாகர குரு பதயே நமோ நம:

33. ஓம் ஐயம் அகற்றிக் கந்தனை வணங்க வழி செய்த குரு பதயே நமோ நம:

34. ஓம் ஒப்பிலா மணிச் சுடரான குரு பதயே நமோ நம:

35. ஓம் ஒப்பிலா ஒளிச் சுடராய் விளங்கும் குரு பதயே நமோ நம:

36. ஓம் கள்ளம் இல்லாமல் வரும் அடியவர்க்கு அருள் ஆசி தரும் குரு பதயே நமோ நம:

37. ஓம் கந்தபிரானைக் கண்ணாரக் கண்ட குரு பதயே நமோ நம:

38. ஓம் கிருபாகர குரு பதயே நமோ நம:

39. ஓம் குன்மம் தீர்த்து எங்களைக் காக்க வந்த குரு பதயே நமோ நம:

40. ஓம் குறைவில்லாச் செல்வம் தரும் குணாகர குரு பதயே நமோ நம:

41. ஓம் குமர குருதாச குரு பதயே நமோ நம:

42. ஓம் குக சாயுச்சம் பெற்ற குரு பதயே நமோ நம:

43. ஓம் குமார சமத்துவம் பெற்ற குரு பதயே நமோ நம:

44. ஓம் குமார சாமியம் அருளிய குரு பதயே நமோ நம:

45. ஓம் குமாரஸ்தவம் தந்த குரு பதயே நமோ நம:

46. ஓம் கிரக தோஷங்கள் அகல அருள் புரியும் குரு பதயே நமோ நம:

47. ஓம் குமரனைக் கண்ட குரு பதயே நமோ நம:

48. ஓம் சருவ தவ வல்லமை அடைந்த குரு பதயே நமோ நம:

49. ஓம் சங்கடங்கள் அகற்றும் குரு பதயே நமோ நம:

50. ஓம் சாந்த மூர்த்தி குரு பதயே நமோ நம:

51. ஓம் சாடுவோரையும் சான்றோர் ஆக்கும் குரு பதயே நமோ நம:

52. ஓம் சன்மார்க்க குரு பதயே நமோ நம:

53. ஓம் சேவிப் போர் வினை தீர்க்கும் குரு பதயே நமோ நம:

54. ஓம் செந்தமிழாலே செந்தில் துதித்த குரு பதயே நமோ நம:

55. ஓம் சண்முக கவச சிகாமணி குரு பதயே நமோ நம:

56. ஓம் சௌபாக்கியம் தரும் குரு பதயே நமோ நம:

57. ஓம் சிந்திப்பார்க்கு அருள் குரு பதயே நமோ நம:

58. ஓம் சுடலையில் தவம் புரிந்த மகா குரு பதயே நமோ நம:

59. ஓம் ஞானக் கொழுந்தாய் நானிலம் போற்றும் குரு பதயே நமோ நம:

60. ஓம் தத்துவ வித்தக குரு பதயே நமோ நம:

61. ஓம் தவயோக தயாபர குரு பதயே நமோ நம:

62. ஓம் தகராலய ரகசியம் தந்தருளிய குரு பதயே நமோ நம:

63. ஓம் திருப்பா அருளிய குரு பதயே நமோ நம:

64. ஓம் தண்டபானியின் உபதேசம் பெற்ற குரு பதயே நமோ நம:

65. ஓம் தென்னகத்தே பிறந்த என் அகத்து ஆசான் குரு பதயே நமோ நம:

66. ஓம் திருக்கந்தருக்குப் பல்லாண்டு பாடியருளிய குரு பதயே நமோ நம:

67. ஓம் துக்க நிவாரணம் அருளும் குரு பதயே நமோ நம:

68. ஓம் நாடி வந்தவர்க்கு நல் அருள்புரியும் குரு பதயே நமோ நம:

69. ஓம் நயந்து எங்களைக் காக்கவல்ல குரு பதயே நமோ நம:

70. ஓம் நவவீரர் கலிவிருத்தம் அருளிய குரு பதயே நமோ நம:

71. ஓம் நீக்கமற நெஞ்சில் நிறைந்த குரு பதயே நமோ நம:

72. ஓம் பந்துக்களும் பயனுறப் பந்தங்கள் தந்த குரு பதயே நமோ நம:

73. ஓம் பாவம் அகற்ற பாம்பன் குமரகுருவான குரு பதயே நமோ நம:

74. ஓம் பாவிகளையும் ரட்சித்தருளும் பரம குரு பதயே நமோ நம:

75. ஓம் பகைகடிதல் பாடித்தந்த குரு பதயே நமோ நம:

76. ஓம் பஞ்சாமிர்தத்தையும் பாடலாக்கித்தந்த குரு பதயே நமோ நம:

77. ஓம் மகோன்னத மகா சக்தியான குரு பதயே நமோ நம:

78. ஓம் மயூரநாத சேவக குரு பதயே நமோ நம:

79. ஓம் மாசிலா மாணிக்கமே குரு பதயே நமோ நம:

80. ஓம் மானசீக வராகி பிரியரான குரு பதயே நமோ நம:

81. ஓம் மூவரைத் தரிசித்த அருள்பெற்ற குரு பதயே நமோ நம:

82. ஓம் ரட்க்ஷக குரு பதயே நமோ நம:

83. ஓம் வல்வினைகளை அகற்றி வரம் பெற்ற குரு பதயே நமோ நம:

84. ஓம் வருவோரைக் காத்தருள வல்ல குரு பதயே நமோ நம:

85. ஓம் வருவோருக்கு அருளும் வள்ளலே குரு பதயே நமோ நம:

86. ஓம் வ ரம் பல பெற்று உரமிக உற்ற குரு பதயே நமோ நம:

87. ஓம் ஜன்மம் அகற்ற வள்ளி மணவாளனின் அருள்பெற்ற குரு பதயே நமோ நம:

88. ஓம விண்ணவரும் போற்றவல்ல குரு பதயே நமோ நம:

89. ஓம் வேண்டியவர்க்கு வேதனை தீர்க்கும் குரு பதயே நமோ நம:

90. ஓம் புண்ணியராய் விளங்கிப் பூமிக்கு வந்த குரு பதயே நமோ நம:

91. ஓம் பொன்னகத்துள் வைத்துக் குமரனைப் பாடியருளிய குரு பதயே நமோ நம:

92. ஓம் ஜீவசமாதி அடைந்த குரு பதயே நமோ நம:

93. ஓம் சிவஞானரூப குரு பதயே நமோ நம:

94. ஓம் சடைதரிக்க அவதரித்த குரு பதயே நமோ நம:

95. ஓம் ஞானபானுவாய் உதித்து நானிலத்தில் ஒளிவீசும் குரு பதயே நமோ நம:

96. ஓம் தாத்தா ஞானியாய் விளங்கும் குரு பதயே நமோ நம:

97. ஓம் திங்களாய் திகழ்ந்து திருவுருவாய்க் காட்சி தரும் குரு பதயே நமோ நம:

98. ஓம் செவ்வாயாய் மலர்ந்து நின் மலரடி பற்ற சர்வ மங்களமும் தரும் குரு பதயே நமோ நம:

99. ஓம் புத புருஷராய் விளங்கி எங்களைச் சுக புருஷராக்கும் குரு பதயே நமோ நம:

100. ஓம் வியாழனாய்த் தோன்றி வியப்பான வாழ்வு தரும் எங்கள் சித்தரான குரு பதயே நமோ நம:

101. ஓம் வெள்ளியாய் முளைத்துக் கடன் தொல்லைகள் தீர்க்க இந்திரனாய் வந்த குரு பதயே நமோ நம:

102. ஓம் சனியாய் நின்று சகலயோகம் தந்து நீண்ட ஆயுள் தரும் சக்தி கொண்ட குரு பதயே நமோ நம:

103. ஓம் சாத்தப்பர் புதல்வரான குரு பதயே நமோ நம:

104. ஓம் செங்கமலம் அம்மையார் ஈன்றெடுத்த குரு பதயே நமோ நம:

105. ஓம் திருவான்மியூரில் முனீந்திரராய் எழுந்தருளி முத்திரைக்கரை சேர்க்கும் குரு பதயே நமோ நம:

ஓம் திருவான்மியூரிலே ஜீவசமாதி கொண்டு எங்களைப் பரமாத்மாவாக இருந்து காத்தருளும் குருவே! அனுதினமும் நின்பாதம் போற்றி வணங்கிட எல்லாம் வல்ல முருகப் பெருமானை வணங்கி வேண்டி நிற்கின்றோம். ஓம் ஸ்ரீமத் பாம்பன்.

## வாழ்த்து

பன்னிரு தடந்தோள் எந்தை பாதமென் கமலம் வாழ்க
தென்னவிர் திருவதேவ சேனையங் குறமின் வாழ்க
மின்னயில் நவிரம் வாழ்க வியனருணகிரி வாழ்க
பன்னருட் குரவர் வாழ்க பரிவுடைச் சீர் வாழ்க

- சீவயாதனா வியாசம் (230)

## திருக்கந்தர் திருப்பல்லாண்டு

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

பண் – பஞ்சமம்

பொன்னுயர் நாட்டிறை புத்திரி தனைமன்றல் புரிந்துசெந் தினைகாத்த
மின்னினை மாமணஞ் செய்தரு ணாடிய வித்தகர் தமையாண்டு
நன்னல நல்கருள் வேந்தென விளங்குபு நான்மறை களும்விரித்துப்
பன்னரும் பரமென விருக்குநந் தேவுக்குப் பல்லாண்டு கூறுதுமே. 1

மூப்பறு கட்டிள மைத்திரு மேனியு மூப்புடை யார்க்கெல்லாம்
மூப்புடை மேன்மையு மூப்புடை யாவிகண் முழுவது மூப்பிளமை
யாப்பறு மாறெமை யாள்கும ராவென நாடிறை மையுமல்கு
பாப்பணை யான்மரு மானெனும் வேலற்குப் பல்லாண்டு கூறுதுமே. 2

நீர்வள மார்பரங் குன்றிலு நீடெழி னிமிர்திருச் செந்திலிலும்
சீர்வள மார்திரு வேரகந் தன்னிலுந் தீதறு பழநியிலும்
ஏர்வள மார்திருச் சோலையங் கிரியிலு மிருந்தடி நினைவார்க்குப்
பார்வள மேல்வள நல்கருட் குகனுக்குப் பல்லாண்டு கூறுதுமே. 3

தணிகைகந் தாசலஞ் சமரா புரிதிருச் சயிலமி லஞ்சியறா
அணிகெழு வேள்வியங் கிரிபொதி யாசல மரிப்பா டுடுப்பைமகா
திணியகத் தேவைசெங் கோடுகுன் றக்குடி திருவுரு மலையாரூர்
பணியுயர் கூடலம் பதியுறை குகனுக்குப் பல்லாண்டு கூறுதுமே. 4

சித்தர்கள் காண்கதிர் காமமண் ணாமலை சீசயி லங்கயிலை
எத்தவ ரும்புகழ் மேரு சிராசல மோர்த்திரு நீற்றுமலை
உத்தம நீள்கழு கோதியெண் கண்ணெனு மொண்டலங் களின்மேவிப்
பத்தருக் கருள்புரி கின்றசெவ் வேளுக்குப் பல்லாண்டு கூறுதுமே. 5

நேசர்கள் வாழெழின் மயிலவொண் மாதிர நீர்மலி பெரும்பேறு
கோசரர் சூழ்கந்த கோட்டங் குமாரவொண் கோட்டநல் வேற்காடு
மாசில்கு மாரபு ரம்பெரு வயலிரு கொடுமளூர் வதிந்தடியார்
பாசறை தீர்த்தருள் புரிமுரு கோனுக்குப் பல்லாண்டு கூறுதுமே. 6

துப்புறு பூண்டிபுள் வேணகர் வேனகர் தூயவர் புகழாண்டார்
குப்பமி றாதபொ னம்பல மெனவே குயினில யங்களிலும்
ஒப்பக நாடுகள் காடுகள் கீழ்மே லுலகுயிர்த் திரள்களிலும்
பப்புவர் மீக்கூ றிடநிறை குகனுக்குப் பல்லாண்டு கூறுதுமே. 7

கட்சியி லேபடுத் துத்துயில் கொண்டிருட் காரியி னுங்கொடிய
அட்சிகண் மோகன மாழ்ந்துள வாயுளை யவம்பணி யவியாமல்
வெட்சியுங் கோடையு மணிதிரு மொய்ம்புகள் விளங்கிட மென்றூவிப்
பட்சியில் வருமுரு கோனெனு மாதிக்குப் பல்லாண்டு கூறுதுமே. 8

எண்ணுந ரெண்ணம தோர்ந்தரு ளேந்தலு மிரவொடு பகலிறந்த
கண்ணர்கள் பின்றொடர் காதலுள் ளானுமொர் காலமு மிடர்நாசம்
நண்ணுத லில்லுயர் பெருந்திற லோனுமெஞ் ஞாலமு நினைவொன்றால்
பண்ணிடு மீசனு மாயுள்ள குகனுக்குப் பல்லாண்டு கூறுதுமே. 9

அன்னையின் மேம்படு கருணையி னாற்குக னடிகளைப் புகழ்தாசன்
தன்னைமெய் யடியவ னாக்கவென் றகம்புறஞ் சார்ந்துவந் தேற்றமதி
சொன்னவ னாயனு பூதிசொன் னவதற்குறு சூரறுத் தெவராலும்
பன்னவொ ணாநல நல்கிய குகனுக்குப் பல்லாண்டு கூறுதுமே. 10

## கட்டியம்

| | |
|---|---|
| ராஜாதி ராஜ ராஜ பரமேச்வர குமாரபகவானுக்கு | ஜய் |
| தேவாதி தேவ தேவ பரமேச்வர சிவசுப்ரமண்யனுக்கு | ஜய் |
| ஸ்ரீவல்லி தேவசேனா சமேத சர்வ சுப லக்ஷணனுக்கு | ஜய் |
| ஞான சக்திதர ஞானப்பிரகாச சுவாமிக்கு | ஜய் |
| குக்குடத் துவஜ ஹஸ்த வஜ்ர பாணிக்கு | ஜய் |
| மயூரவாகன மகாகிருபா நிதிக்கு | ஜய் |
| அருணகிரிநாத ஆனந்த பராபரனுக்கு | ஜய் |
| பாம்பன் ஸ்ரீமத் குமர குருதாச சுவாமிகளுக்கு | ஜய் |
| மஹாதேஜோ மண்டலத்தாரைக் காத்தருள் கடவுளுக்கு | ஜய் |

**சுப்ரமண்யோம்! சுப்ரமண்யோம்! சுப்ரமண்யோம்!**

## தீபாராதனை

நாத விந்துக லாதீ நமோநம
வேத மந்த்ரசொ ரூபா நமோநம
ஞான பண்டித ஸாமீ நமோ நம வெகுகோடி

நாம சம்புகு மாரா நமோநம
போக அந்தரி பாலா நமோநம
நாக பந்தம யூரா நமோநம பரசூரர்

சேத தண்டவி நோதா நமோநம
கீத கிண்கிணி பாதா நமோநம
தீர சம்ப்ரம வீரா நமோநம கிரிராஜ

தீப மங்கள ஜோதீ நமோநம
தூய அம்பல லீலா நமோநம
தேவ குஞ்சரி பாகா நமோநம அருள்தாராய்

ஈத லும்பல கோலால பூஜையும்
ஓத லுங்குண ஆசார நீதியும்
ஈர முங்குரு சீர்பாத சேவையு மறவாத

ஏழ் தலம் புகழ் காவேரியால் விளை
சோழ மண்டல மீதே மனோகர
ராஜகம்பீர நாடாளு நாயக வயலூரா

ஆதரம்பயி லாரூரர் தோழமை
சேர்தல் கொண்டவ ரோடேமு னாளினில்
ஆடல் வெம்பரி மீதேறி மாகயி லையிலேகி

ஆதி யந்தவு லாவாசு பாடிய
சேரர் கொங்குவை காவூர்ந னாடதில்
ஆவி னன்குடி வாழ்வான தேவர்கள் பெருமாளே.

**புஷ்ப சமர்ப்பணம்**

ஓம் அஸுரகுலமர்த்தநாய யோகாய
யோகாதி பதயே சாந்தாய
சாந்த ரூபினே சிவாய சிவநந்த நாய ஷஷ்டி ப்ரியாய
ஸர்வஜ் ஞாநஹ்ருதயாய ஷண்முகாய ஶ்ரீம் ஶ்ரீம் ஹ்ரீம்
ஷம் குஹரவி கங்காலாய காலரூபினே
ஸுர ராஜாய ஸுப்ரஹ்மண்யாய நம.



## தவத்திரு பாம்பன் அருட்சித்தர் சஞ்சீவி ராஜா சுவாமிகள்:

இளமைப் பருவத்திலேயே இறை வழிபாட்டில் நாட்டம் உடையவராய் இருந்தார். அதனால் உலகக் கல்வியான பள்ளிக் கல்வியில் நாட்டம் குறைந்தது. அதனால் பள்ளிப் படிப்பை நீத்தார். ஒருவருக்கும் சொல்லாமல் பாரத நாட்டின் வடபுலம் சென்றார். இமயமலை, நேபாளம் போன்ற பகுதிகளுக்குச் சென்று பல்வேறு ஞான, யோக முறைகளைப் பின்பற்றிச் சாதனைகள் செய்துவரும் இவருக்கு, வழிபடு தெய்வம் முருகன், ஆகையால் தாம் கற்றுக் கொண்ட நெறிகள் பலவாயினும் அவற்றில் மனம் செல்லவில்லை. இறுதியாக இவருக்கு மானசீகமாகக் கிடைத்த சற்குருநாதர் பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் ஆவார்கள். சுவாமிகள் காட்டிய ஏக தெய்வ வழிபாட்டில் உறுதியாய் நின்று முருகனையே முழு முதற் பொருளாக எண்ணி வழிபட்டு வருகின்றார். புறப்பூசையும் அகப்பூசையும் செய்கின்றார். உலகப்புகழை நாடுவதும் சீடர் கூட்டம் சேர்ப்பதும் கூடாது என எப்போதும் அடியார் கூட்டத்தில் ஒருவராகவே இருப்பதில் நாட்டம் உடையவராக உள்ளார். இவரைப் பலர் குரு எனப் போற்றினாலும் அதை இவர் விரும்புவதில்லை.

சுவாமிகள் இல்லறம் ஏற்றது போல் இவரும் இல்லறம் ஏற்றுள்ளார். அது பிராப்த கன்மத்தின் செயல். அதை எவரும் தடுக்க முடியாது. இவரின் துணைவியார் தம் துணைவரைப் போன்றே சுவாமிகளிடமும் முருகனிடமும் தீவிர பக்தி உடையவராய் வாழ்ந்து வருகிறார்.

காஞ்சியில் ஒரே சமயத்தில் ஆயிரம் யாகம் செய்து ஆயிரம் பேருக்குத் தனித்தியே மந்திரம் ஓதிச் சாதனை படைத்துள்ளார். காஞ்சி குமரக்கோட்டத்தில் வியாழன் அன்று அடியார்களுக்கு அன்னதானம் வழங்கி வருகிறார். பின்னத்தூரில் சுவாமிகள் வழிபட்ட சிவன் கோயிலுக்கு திருப்பணி செய்து, குடமுழுக்கு திருவிழாவையும் சிறப்பாக நடத்தியுள்ளார். குந்துகால் முனீஸ்வரர் திருக்கோயில் திருப்பணியும் செய்து முடித்துள்ளார். சித்த மருத்துவம், வாஸ்து சாத்திரம், ஜோதிடம், யோக முறை அனைத்தையும் முறையாகக் கற்றுணர்ந்தவர் தவத்திரு பாம்பன் அருட்சித்தர், சஞ்சீவி ராஜா சுவாமிகள் ஆவார். சற்குரு பாம்பன் சுவாமிகளின் அருளைப் பூரணமாகப் பெற்று உலக உபகாரமாக நற்செயல்கள் புரிந்து வருகிறார். வளர்க சுவாமிகள் தொண்டு.

இங்கனம்
**R.பிரகதீஸ்வரன்**
மற்றும் பாம்பன் சாமி அடியார்கள்